# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு




சிலம்பு 15 தாது - தை 1937 பரல் 6




ஆப்ரஹாம் லிங்கன்

ஓம்
செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

சிலம்பு-கரு] தாது—தை [பரல்-சூ

# திருநாவுக்கரசு அடிகள் தேவாரம்

## திருக்குறுந்தொகை

### திருச்சேறை

என்ன மாதவஞ் செய்தனை நெஞ்சமே
மின்னு வார்சடை வேத விழுப்பொருள்
செந்நெல் லார்வயற் சேறையுட் செந்நெறி
மன்னு சோதிநம் பால்வந்து வைகவே.

பதவுரை:—

நெஞ்சமே—எனது நெஞ்சே

வேதம்—அருள்மறைகளிற் கூறப்பட்டிருக்கிற

மின்னு வார் சடை—ஒளிவீசும் நீண்ட சடைகளையுடைய

விழுப்பொருள்—மேலான பொருளும்

செந்நெல் ஆர் வயல்—செந்நெல் விளைகின்ற வயல்களாற் சூழப்பட்ட

சேறையுள் செந்நெறி—திருச்சேறைத் தலத்தில், செந்நெறி என்ற திருக்கோயிலில்

மன்னுசோதி—நிலையாக வீற்றிருந்தருளும் ஒளிப்பொருளுமாகிய சிவ பெருமான்

நம்பால் வந்து வைக—நம்மிடத்தில் (நமது மலஇருள் முற்றிலும் நீங்கும்படி) அருள் ஒளியுடன் விளங்குதற்கு

என்ன மாதவம் செய்தனை—நீ முற்பிறவிகளில் உண்மைச் சரியை கிரியை யோகங்களாகிய பெரிய தவங்களைச் செய்திருக்கின்றாய் (அத்தவங்களின் பயனாக நீ இப்பொழுது மெய்யறிவை அடைந்திருக்கிறாய். இல்லா விட்டால், சிவபெருமான் நம்மிடத்தில் விளங்குதற்குக் காரணமில்லை.)

விளக்கவுரை:—

வேதம்—வேதம் என்பது இங்கே பொதுவாக எல்லா அருள் மறைகளையுங் குறிக்கிறது.

விழுப்பொருள்—தனக்கு மேலானதொரு பொருள் இல்லையாதலின் சிவபெருமான் விழுப்பொருள் என்று கூறப்படுகின்றார்—பரம் பொருள் என்பதும் அக்கருத்தையே குறிக்கிறது.

சேறையுள் செந்நெறி—திருச்சேறை என்பது தலத்தின் பெயர்; செந்நெறி என்பது அத்தலத்திலுள்ள திருக்கோயிலின் பெயர்; அக்கோயிலில் வீற்றிருக்கும் இறைவன் பெயர் செந்நெறியப்பர், நெல்லையப்பர் என்பது போல.

மன்னுசோதி—தோற்றக் கேடுகளின்றி என்றும் ஒருதன்மைத்தாய் விளங்கும் சோதியாதலின் மன்னுசோதி என்றார். மாணிக்க வாசக அடிகள் திருவெம்பாவை முதலாவது பாட்டில், 'ஆதியும் அந்தமுமில்லா வரும்பெருஞ் சோதி' என்று கூறியது காண்க. சோதி என்பது திருச்சேறைச் செந்நெறித் திருக்கோயிலில் வீற்றிருக்கும் சிவலிங்கப்பெருமானை (சதாசிவமூர்த்தியைக்)குறிக்கிறது. சிவலிங்கத் திருவுருவமானது மலப்பற்றுடைய நம்போல்வாருடைய புறக்கண்ணுக்குச் சிலை யுருவமாகத்தோன்றுவது போலன்றி, அடிகளுடைய அகக்கண்ணுக்கு அச்சிலைக்கு ஆதாரமாயும் அதற்கு உள்ளும் புறம்பும் ஊடுருவியு மிருக்கிற தூவெளி (பரமாகாசம்) ஒளியாகத் தோன்றும், பதார்த்தங்கள் பாராது பரமே பார்த்திருக்கும் அடிகளுக்கு சிவலிங்கச் சிலையுருவம் தோன்றாது. ஆதலின், அடிகள் அச்சிவலிங்கத் திருவுருவத்தை மன்னு சோதி என்றார்.

> " அல்லும் பகலும் அருளுடன் தூங்கினல்
> கல்லும் பிளந்து கடுவெளி யாமே "

என்று திருமூலர் திருமந்திரம் 2303-வது பாட்டிற் கூறியது காண்க.

நம்பால் வந்து வைக—அடிகள் முதற்கண் தமது நெஞ்சை, 'நெஞ்சே, என்ன மாதவஞ் செய்தனை' என்று முன்னிலையில் விளித்துக்

கூறிப் பின் அதனைத் தம்மோடு உளப்படுத்தி நம்பால் வந்து வைக என்று பன்மையில் வைத்துக் கூறியதை நோக்குக; இதனால் ஆன்மா நெஞ்சினை (மனதை)த் துணையாகக் கொண்டுதான் தவங்கள் செய்தல் வேண்டும் என்பதும் அத்தவங்களின் பயன் ஆன்மா தன்னுடனுன்று சேர்ந்து தன்னுள் ளொடுங்கிய நெஞ்சுடன் அத்தவங்களின் பயனாகிய மெய்யறிவை அடைகின்றது என்பதும் குறிப்பிலுணர்த்தப்பட்டன. உலக நெறியில் புற விடயங்களைப்பற்றச்செய்து ஆன்மாவைச் சிறுமைப்படுத்துவதும், வீட்டு நெறியில் சிவத்தைப் பற்றச்செய்து ஆன்மாவைப் பெருமைப்படுத்துவதும் நெஞ்சு ஆகலின் அடிகள் என்ன மாதவஞ் செய்தனை என்று நெஞ்சைப்பார்த்துக் கூறினார். நெஞ்சின் துணையின்றி ஆன்மா மாதவஞ்செய்ய முடியாது என்பது கருத்து. தவத்தைச் செய்வது நெஞ்சு, தவப்பயனடைவது ஆன்மா ஆதலின் அடிகள் நம்பால் வைக என்றார். தவஞ் செய்தற்கு நெஞ்சின் துணையின்றி ஆன்மா தவஞ்செய்ய முடியாது என்பது கருத்து. தவத்தைச் செய்வது நெஞ்சு, தவப்பயனடைவது ஆன்மா ஆதலின் அடிகள் நம்பால் வந்து வைக என்றார். தவஞ்செய்தற்கு நெஞ்சு முதன்மை; தவப்பயனடைதற்கு ஆன்மா முதன்மை. "சிந்தையு மென்பாற் செயலற் றடங்கிவிட்டால் வந்ததெல்லா நின் செயலா வாழுவே பராபரமே" என்று தாயுமான அடிகள் கூறுதல் காண்க. வந்து—இங்கே விளங்கி என்ற பொருளில் வந்தது. 'வைகவே' என்பதிலுள்ள ஏ—அசை.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

## தமிழ்க் காதலர்

ஓவியர்நீள் சுவரெழுதும் ஓவியத்தைக் கண்ணுறுவான்
தேவியையாம் அழைத்திடஆண் சித்திரமேல் நான்பாரேன்
பாவையர்தம் உருவமெனில்நீர் பார்க்கமனம் பொறேனென்றாள்
காவிவிழி மங்கையிவள் கற்புவெற்பின் வற்புளதால்.

—வேதநாயகம் பிள்ளை

# இலக்கணமும் இலக்கியமும்:
# LANGUAGE AND LITERATURE

## குறுந்தொகை

### மூலமும் விளக்க உரையும்

[இலந்தையடிகள் வித்துவான் இரா. சிவ. சாம்பசிவன்]



### பாலை

*தலைமகளைவிட்டுப் பொருள்வயிற்பிரிந்த தலைமகன் பிரிவு நீட்டித்தவழி ஆற்றாது கவன்ற தலைவியைக் கடிது வருவர் என்று கூறித் தோழி ஆற்றுவித்தது.*

பாலைபாடிய பெருங்கடுங்கோ பாடியது.

**37.** *நசைபெரி துடையர் நல்கினு நல்குவர்*
*பிடிபசி களைஇய பெருங்கை வேழம்*
*மென்சினை யாஅம் பொளிக்கும்*
*அன்பின, தோழி, அவர்சென்ற வாறே.*

*என்பது தோழி 'கடிது வருவர்' என்றாற்றுவித்தது.*

**பதவுரை:—**

*தோழி—தோழியே, நசை பெரிது உடையர்—தலைவர் நம்மிடத்து மிக்க அன்பாகிய விருப்பமுடையவர்; அவர் சென்ற ஆறு—அவர் போய வழியில், பெருங்கை வேழம்—பெரிய துதிக்கையை யுடைய ஆண் யானை, பிடி பசி களைஇய—பெண் யானையின் பசியை நீக்கும் பொருட்டு, மென்சினை—மெல்லிய கொம்புகளையுடைய, யாஅம்பொளிக்கும் அன்பின—யாமரத்தை முறிக்கின்ற அன்புடையனவாகக் (காணக் கண்டு), நல்கினும் நல்குவர்—(தாமும் அன்புகொண்டு சேணகன்று தங்கும் தம் கருத்தைவிடுத்து) நம்மாட்டு அருள் புரியினும் புரிவார். (ஆதலின் கவலற்க) ஏ—அசை.*

*நசை—விருப்பம், அன்பு. களைஇய—களையும்பொருட்டு. நல்கல்—அருளல். யா + பொளிக்கும்—யா + அ + ம் + பொளிக்கும் = யாஅம் பொளிக்கும் என்றாயிற்று.*

பொளிக்கும் என்பது பிளக்கும் எனவும் காணப்படும். "குறிய தன் முன்னரு மோரெழுத்து மொழிக்கு மறியத் தோன்று மகரக் கிளவி" என்னும் விதிப்படி அகரச்சாரியையும், "யாமரக் கிளவியும் பிடாவும் தளாவும் ஆமுப் பெயரு மெல்லெழுத்து மிகுமே" என்னும் விதிப்படி இனமெல்லெழுத்தும் பெற்றது. (தோல்—எழுத்து—உயிர் மயங்கில். 24, 26) யா—பாலைவனத்திற் காணும் மரம்.

இறைச்சி:—

பிடியின் பசியைக் களையும்பொருட்டு அன்பின் மிகுதியால் வேழம்யாமரத்தின் கிளையை முறித்தலைத் தலைவர் காணுவாராதலில் தாமும் அன்புகொண்டு நின்துயர் களைய வந்து, அருள்புரிவர் என்று தோழி வற்புறுத்திக் கூறினள். இதற்கு,

"அன்புறு தகுநன இறைச்சியுட் சுட்டலும்
வன்புறை யாகும் வருந்திய பொழுதே"

என்பதால் அறிக. (தோல். பொருளி. 37)

அன்பின—அன்பையுடையன. அன்பின் எனக் கொண்டால், அன்பைக் கண்டதனால் என்க. சென்ற ஆறே—சென்ற ஆற்றின் கண் என எழனுருபு விரிக்க.

"நெருப்பவி கனலி உருப்புச்சினந் தணியக்
கருங்கால் யாஅத்து வரிநிழல் இரீஇ"

என்பது ஈண்டு நோக்கத் தக்கது.

மேற்கோள் விளக்கம்:—

"நசைபெரிது............சென்றவாறே"——இதனுள் முன்பே நெஞ்சகத் தன்புடையார் அதன்மேலே களிறு தன் பிடியின் பெரும் பசி களைதற்கு மென்றோலையுடைய ஆச்சாவைப் பிளந்து அந்நாரைப் பொளித்தூட்டும் அன்பினையுடைய அவர்சென்ற ஆறதனைக் காண்பர் காண் என்று அன்புறு தகுந கூறிப் பிரிவாற்றாதவளை வற்புறுத்தவாறு காண்க. நம்மேல் இயற்கையாக அன்பிலனென்று ஆற்றாளாவளென்று கருதாது இவளை ஆற்றுவித்தற்பொருட்டு இவ்வாறு கூறலின் வழுவாயமைந்தது."

(—தொல்: பொருளி—சூ. 37-பக்கம் 831)

"தேம்பட மலர்ந்த மராஅ மெல்லிணரு
மும்ப லகைத்த வொண்முறி யாவும்" —(மலைபடுகடாம் 28-29)

"இலை இலவோங்கிய நிலையுயர் யாஅத்து" —அகம் 31.

"யானை யொடித்துண் டெஞ்சிய யாஅ" —(குறுந். 232)
"களிறு, யாஅந்தொலையக் குத்தி" —(குறுந். 308)

"வருகுவர் மீண்டெனப் பாங்கிவலித்தல்"
என்பதற்கு மேற்கோள். —(நம்பியகப்—சங்கம்)

1. "நல்கினு நல்குவர்"—"நல்கலு நல்குவர்"—பிரதிபேதம்.
2. மென்சினையா அம்பொளிக்கும்—"மென்சினையா அம்பிளக்கும்" பிரதிபேதம்.
3. 'அன்பின' 'அன்பின்'—பிரதிபேதம்.

"மரஞ்செல மிதித்த மாஅல்போலப்
புன்றலை மடப்பிடி யுணீஇய ரங்குழை
நெடுநிலை யாஅ மொற்றி நனைகவுட்
படிஞிமிறு கடியுங் களிறே"—அகம் (59-6-9)

யானை யாமரத்தை முறித்தல் இதில் கூறப்பட்டதும் காண்க. பிடி நீருண்ணும் பொருட்டுக் குளத்தில் படிந்த வண்டுகளை யாமரத்தின் சினைகளை முறித்து வீசி நீக்கும் ஆண் யானை என்றபொருளும் ஈண்டு அறியத்தக்கது.

"உருகு காதலிற் றழைகொண்டு மழலைவண் டோச்சி
முருகு நாறுசெந் தேனினை முழைநின்றும் வாங்கிப்
பெருகு சூலிளம் பிடிக்கொரு பிறைமருப் பியானை
பருக வாயினிற் கையினின் றளிப்பது பாராய்"
—(கம்ப: சித்திரகூட. (அயோத்) 10)

இங்கு ஆண்யானை பெணயானைக்கு உதவிபுரிதலைக் கூறியுள்ளதும் நோக்கத்தக்கது.

"சினையாரும் பிளக்கும்" என்ற பாடத்திற்குக் கிளைகளையுடைய ஆத்தி மரத்தையும் பிளக்கும் என்க. பாலையில் ஆத்தி காணல் அரிதாதலின் அது சிறந்ததன்று.

"பிடிபசி களைஇய பெருங்கை வேழம்"—என்பது களிற்றுக்குப் பிடியின்பால் அன்பு அதிகம் என்பது. இதனைக் கீழ்வருவற்றாலும் காண்க:—

1. "மடப்பிடி யுயங்குபசி களைஇயர், பெருங்களிறு"
2. "பிடி யூட்டிப் பின்னுண்ணுங் களிறு"
3. "இரும்பிணர்த் தடக்கைநீட்டி நீர்கொண்டு, பெருங்கையானை பிடியெதிரோடும்"
4. "மடப்பிடி தழீஇய பெருங்கைவேழம், தேன்செய் பெருங்கிளை இரிய வேங்கைப், பொன்புரை கவழப் புறந்தரூஉட்டு மாமலை'
5. "மறந்தனர் கொல்லோ தாமே களிறுதன்,
னுயங்குநடை மடப்பிடி வருந்த நோனது,
நிலையுயர் யாஅத் துலையக்குத்தி,
வெண்ணார் கொண்டு கைசுவைத் தண்ணார்
தழுங்க னெஞ்சமொடு முழங்கு
மத்த நீளிடை யழப்பிரிந் தோரே"

6. "தொடுகுழி மருங்கிற் றுவ்வாக் கலங்கல்
கன்றுடை மடப்பிடிக் கயந்தலை மண்ணிச்
சேறுகொண் டாடிய வேறுபடு வயக்களிறு"

7. "யானை தன், கொன்மருப் பொடியக் குத்திச் சினஞ்சிறந்,
தின்றுவேனி லின்றுணையார, முளிசினை மராஅத்துப்
பொளிபிளந் தூட்ட"

8. "வீழ்பிடி கெடுத்த வெண்கோட் டியானை,
யுண்குளகு மறுத்த வுயக்கத் தன்ன"

9. "செந்தினை கவர்ந்த பைங்கண் வேழம்,
கருவரைப் பிரசங் கையின் வாங்கி,
யீயின மிரிய வீசி வயவுப் பிடியின்,
வாயுறக் கொடுத்த செவ்வி நோக்கி"

10. "அழற்பட் டசைந்த பிடியை யெழிற் களிறு,
கற்சுனைச் சேற்றிடைச் சின்னீரைக் கையாற்கொண்,
டுச்சி யொழுக்குஞ் சுரம்"

11. "குழவிப் பிடி குஞ்சர மாழ்குமெனத்,
தழுவிச் சுடு வெவ்வழ ருங்குவன"

12. "உழையுடைக் கற்பின ருழையிற் சென்றிடா,
தழையுடைப் பிடிக்குநீர் தணிக்கும் வேட்கையாற்
புழையுடைத் தனிக்கரம் போக்கிப் பொங்குசூன்
மழையுடைத் திடுவன மதங்கொள் யானையே"

13. "ஒருத்தற் குலம்பிடிக் கூண்பல வூட்டியுண் டோங்குநிழற்,
பொருத்தற் குதைப்பது நின்னக நாடு"

இவை, "தானுமுண் ணும் விருந்துண்டு மிகினே" என்பதை நினைப் பூட்டுதல் அறிக.

மெய்ப்பாடு—அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்.

பயன்—ஆற்றுவித்தல்.

---

# தமிழிலக்கணத் தத்துவக்கிடை

[ஈப்போ. திரு. தியாகராஜன் அவர்கள், G. M. V. C.]

## வேற்றுமை

விக்ஷேப சக்தியால் ஒன்றே பலவாய் வேற்றுமைப்பட் டனவென, தத்துவ நூலார் சொல்வதற் கேற்றுப்போல் நன்னூலாரும் வேற்றுமை இயல் கிறுவினர்.

உலகப்பொருள்கள் நாம ரூபத்தால் வேற்றுமைப்பட்டனவெனச் சாஸ்திரிகள் கூறுவர்; அஃதேபோல், நாம வேற்றுமையைப் பெயர்வேற்றுமையெனவும், ரூபவேற்றுமையை உருபு வேற்றுமையெனவும் புகன்றனர் நம் இலக்கணத்தார்.

இத்துடன் விடாது எழுவகைத் தோற்றமென்று தத்துவ நூலார் சொல்வதுபோல "வேற்றுமை தானே யேழென மொழிப" என உருபேற்கும் வேற்றுமையையும் பிரித்தனரெனலாம்.

## ஆவரண சக்தி

விக்ஷேப சக்தியின் நிர்ணயமிவ்வாறாயின் ஆவரண சக்தியின் நிலைமையெத்தகையது? வேற்றுமை மயங்கியலை ஆவரண சக்திக் கொப்பிடலாம்.

இவ்வியலை உயிர் மயங்கியல், மெய் மயங்கியலென இருவகைத்தெனச் சாற்றி, அவற்றில் உயிர் மயங்கியலை உலகஇயல்பில் எதையொக்குமெனில்;—ஒருவகைச் சக்தியே (Energy) Hydro electric energy எனவும், Electro Magnetic energy எனவும் உலகில் நிலவதை நாம் நாள்தோறு மனுபவிக்கிறோம். நீரிலுள்ள நெகிழ்ச்சிச் சக்தியே Electricity யாகவும், பின் Magnetic energy யாகவும் மயங்கி நிற்கின்றது என்பது யாவரும் அறிந்ததே. எனவே இச்சக்திகளின் மயக்கத்தை உயிர் மயங்கியல் ஒக்கும்

நீரே பனிக்கட்டியாகவும், ஆவியாகவும், அஃதாவது ஒரு மெய்ப்பொருளே (matter) பிருதிவி, அப்பு, வாயுத்தன்மையேற்று மயக்கமடைவதை யொக்கும் மெய்மயங்கியல்.

உயிர் மயங்கியலை illusion of the soul எனவும், புள்ளி மயங்கியலை illusion of the body எனவும் கூறினர் திரு. மாணிக்க நாய்க்கரும்.

## சொல்

முற்கூறியவாறு வியாபகமாகிய சொற்களை உலகப்பொருள்களுக்கொப்பிட்டு அதற்குச் சான்றாக "எல்லாச்சொல்லும் பொருள் குறித்தனவே" எனத் தொல்காப்பியனார் மொழிந்ததையும் காட்டினேன்.

உலகப்பொருள்களைப்போல் இச்சொற்களுக்கு அமைப்பும், குறிப்பும் உளவோ வெனில்:—

> "பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
> சொல்லானாகு மென்மனார் புலவர்"

என்று தொல்காப்பியனார் சொன்னதே போதிய சான்றாகும்.

மேலும், உலகில் பிண்டப்பொருள், அபிண்டப்பொருள்கள் (concrete and abstract) உளவே யாகையால், அவைகட்கு

"தெரிபு வேறுநிலையிலுங் குறிப்பிற் றோன்றலு
மிருபாற் றென்ப பொருண்மை நிலையே"

[தோல்: சோல்—157]

என்னும் விதியைக்காட்டி ஒப்புவமை காட்டலாம்.

(உ-ம்) மரம், மக்கள் முதலியன வெவ்வேறாகத் தோற்றத்தால் தெரியலாம். ஆனால் மனம், புத்தி முதலியவற்றைக் குறிப்பாலுணரலாம்.

பதம்

"Elemental substances singly or in combination become the material cause of the products of the world" —(*Indian Philosophy Vol. II. Page 189*) என்பதாக Sir இராதாகிருஷ்ணன் கூறினார். இதைப்போலவே,

"எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருடரிற் பதமாம்—அது பகாப்பதம், பகுபதமென இருபாலாகி இயலுமென்ப"

என்று பவணந்தியாரும் பதவியல் 127-ம் சூத்திரத்தில் சொன்னார். இதில் பகாப்பதமென்பதை unicellular எனவும் பகுபதமென்பதை multicellular எனவும் ஒப்பிடின் ஒவ்வாதோ?

The things of the world, material and immaterial, must have being or existence, must function in time and space and should possess attributes or characteristics.

எனவே—நம் மொழியின் சொற்களைப் பெயர், வினை, இடை, உரியென நான்காப் பகுத்தனர்.

"சொல்லெனப் படுப பெயரே வினையென்
றாயிரண் டென்ப வறிந்திசி னோரே"

[தோல்: சோல்—358]

என்று விதித்து, அப்பெயர்களும், வினைகளும், காலம், இடம், உரி (attributes) இன்றி நிலையாவாகையால்

"இடைச்சொற் கிளவியு முரிச்சொற் கிளவியு
மவற்றுவழி மருங்கிற் றோன்று மென்ப"

தோல்: சோல்.—159]

என்றும் விதித்ததால் சொற்கள் நான்காயின.

## பெயர்

"பெயரெனப் படுபவை தெரியுங் காலை
உயர்திணைக் குரிமையு மஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்கு மோரன்ன வுரிமையு
மம்மூ வுருபின தோன்ற லாறே" [தொல்: சொல்—160]

ஆங்கிலேயர் உலகப்பொருள்களை உயிருள்ளவை, உயிரில்லவை (Animates and Inanimates) யெனப் பிரிக்க, நம்மவரோ அஃறிணை, உயர்திணையென ஏன் பிரித்தனரெனின், உயர்திணைப் பகுதிக்குரியவரே தம் வினைகளுக்குப் பொறுப்பாளராவார். அஃறிணைப் பெயர்க்குரியவை தம்வினைக்கும்பொறுப்பற்றவை. இது, வினையியல் கூறுங்கால் நன்கு விளங்கும்.

அன்றியும் உயர்திணை, அஃறிணையென்பன சமஷ்டிநோக்கத்தைக் குறிக்கும்.

இதற்கேற்க, வியஷ்டி நோக்கத்தைத் தழுவியது போலப் பால் குறித்தனர்.

இவ்வியட்டி நோக்கமில்லையேல் (Individualistic conception) ஆண், பெண், பொது, ஒன்று, பலவெனப் பால் (பான்மை) தோன்ரு. எனவே இத்திணை, பால், பாகுபாடுகளும் தத்துவத்திற் கொத்ததே.

இச்சமஷ்டி, வியஷ்டி நோக்கங்களைத் தன்னிடத்திலும், எதிரிலும், பல்வகையிலுமுணரலா மாகையால் இத்தன்மையை விளக்கத் தன்மை, முன்னிலை, படர்க்கை யெனும் மூவிடமும் கூறினர் நன்னூலார்.

## வினையியல்

"தினையிட்டவன் தினையறுப்பான், வினையிட்டவன் வினையறுப்பான்" எனும் முதுமொழியில் எவ்வாறு வேற்றுமையின்றி, ஏற்றகாலத்தில் வினைப்பயனை யநுபவிப்போமென்று தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறதோ அதைப்போலவே

"வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்"

[தொல்: சொல்—198]

என்றும்—

"என்று கூற விசைய ணியம்புவா
னின்று யோகத்திலே நெடுநா ளெலாம்
பொன்றுங் காலத் தயர்ந்துயிர் போயினுற்
சென்று நற்கதியே யன்று சேருமோ"

"யோக மேவ வினைக ளொருவினன்
மோக மேவலின் யோக முடிந்தில
னேக மேயிரு பாலும் விடாசிற்க
மேக மேயென வீய்ந்து கழியுமோ"
[ப. கீதை: அ. 6—பா. 27, 28]

என்று விசயன் கேட்டதற்கு, கண்ணபிரான்

"யோக முடியா திடையே யிறந்தவன்
யாக வினைபல செய்தாங் கிசைந்திடுஞ்
சோகமி னுடெய்தித் துன்பந் தொடராதே
போக நுகர்ந்து பல்காலங்கள் போயபின்"

"சிறந்தவரசர் திருக்குலத்தாத
லறந்தருயோகிகடங் குலத்தாதல்
பிறந்து பெறுவதெல்லா மெய்திப் பின்னு
மறந்த வியோக மகிழ்வுட னெய்தும்"
—[ப. கீதை: அ. 6: பா 31—32]

என, முன் இயற்றிய வினையழியாது அவ்வினைக்கேற்ற இடமும் காலமும் மற்றும் பெற்று அவ்வினையை மறுபடியும் எய்து மென்று கூறியதற்கொப்ப

" குறிப்பினும் வினையினு நெறிபடத் தோன்றிக்
காலமொடு வரூஉம் வினை"
[தொல்: சொல்—201]

எனவும்,

"செய்பவன் கருவி நிலஞ்செயல் காலம்
செய்பொரு ளாறுந் தருவது வினையே"
[பவண. நன்னூல்: சூ.—319]

எனவும்,

இலக்கணத்தார் கூறிய விதிகளையும் ஓர்ந்து பார்க்கின், இவ்வியலும் தத்துவத்திற்கொத்ததே யெனத்தோன்றுகிறது. இன்னும்,

"அவை தாம்
முற்றும், பெயர் வினையெச்சமு மாகி
ஒன்றிற் குரியவும் பொதுவு மாகும்"
[பவண.—321]

என்று பவணந்தியார் கூறியது எவ்வாறெனில்:—முற்கூறிய வினைகள் ஒரு பிறவிக்கே காரணமாகி அப்பிறவியில் முற்றுறினு முற்றும், அல்லது நம் எச்சமாகிய நம்மக்களை நம்வினைகள் தழுவியும்,

"கொண்டு பயிலுங் குணமில னாகினு
முண்டு தெளிவென் றுணர்ந்த வியோகந்தான்
பண்டு பயின்ற பயிற்சியி னன்றனைத்
தண்டுத லின்றிமுன் றானே தலைப்படும்"

[ப. கீதை: 6 அ. 33 பா]

என்பதற்கிணங்க நம் வினையெச்சம் பிற்பிறவியில் நம்வினைக் காதாரமாயும் நிற்கும்.

இவ்வாறான தத்துவக்கொள்கைகளைப் பூண்டதாலோ வினைச்சொற்களைப் பிற்காட்டுமாறு பகுத்தனர்?

| Grammatical Expressions or terminology | Philosophical Expressions or terminology |
|---|---|
| 1. இறந்தகாலவினை | 1. சஞ்சித கர்மம் |
| 2. நிகழ்காலவினை | 2. பிராரப்த கர்மம் |
| 3. எதிர்காலவினை | 3. ஆகாம்மிய கர்மம் |
| 4. தன்வினை | 4. ஆதிஆத்மீக கர்மம் |
| 5. பிறவினை | 5. ஆதிபௌதீக கர்மமும் ஆதிதெய்வீக கர்மமும் |
| 6. குன்றியவினை | 6. சஞ்சித கர்மத்தில் அநுபவித்ததுபோக இன்னும் அநுபவிக்கவேண்டிய வினை |
| 7. குன்றாவினை | 7. அனுபவிக்காமல் விடுபட்டதால் இனி முற்றும் அனுபவிக்கவேண்டிய வினை |
| 8. முற்றுவினை | 8. இப்பிறவியில் இயற்றி இப்பிறவியிலேயே அனுபவித்து முடிந்த வினை. |
| 9. குறைவினை | 9. இப்பிறவியில் இயற்றி இப்பிறவியில் முற்றும் அனுபவியாத வினை. |
| 10. தெரிநிலைவினை | 10. இப்பிறவியில் அனுபவிக்கும் பலாபலன்களுக் காதாரமின்னதெனத் தெரிந்த வினை. |
| 11. குறிப்புவினை | 11. இப்பிறவியில் அனுபவிக்கும் பலாபலன்களுக்கு |

ஆதாரமின்னதெனத் தெரியாமல் குறிப்பாக நிற்கும் வினை.

12. துணைவினை — 12. இப்பிறவியில் இயற்யிருக்கும் வினைக்குத்துணையாகும் வினை.

13. எதிர்மறைவினை — 13. பின்வரும் வினைப்பயனை மறைக்கவியற்றும் வினை

"புலனவை பொறிவழி போக்கு மாற்றியே
பலனற வினைகள் என்பொருட்டுப் பண்ணுவாய்
நலனுறு மவ்வினை நாச மின்றியே
சலமுறு பிறவியுந் தவிர்க்குந் தன்மைகேள்"

[ப. கீதை. அ. 3 பா: 5]

என்பதற்கேற்க, பிறவியைத் தவிர்க்க இயற்றும் வினையே எதிர் மறைவினை.

ஏனெனில்,

" செய்தெ னெச்சத் திறந்த கால
மெய்திட னுடைத்தே வாராக் காலம்"

[தொல். சொல். 239]

[முன் விளக்கியவைகளை P. V. M. Naicker நூலிற் காண்க]

---

## பழந்தமிழ் அகப்பாட்டு

ஆ அ அளிய அலவன்றன் பார்ப்பினோடு
ஈஇர் இரையுங்கொண்டு ஈர்அளைப் பள்ளியுள்
ஊஉந் திரைஅலைப்பத் துஞ்சாது இறைவன்தோள்
மேஎ வலைப்பட்ட நம்போ னறுநுதால் !
ஓ ஒ உழக்குந் துயர்.

## THE FORSAKEN WIFE

Ah ! the loving crab with its young ones, sharing its dripping food, in its wet hollow chamber, amid the buffet ing of the foam-besprinkling waves, sleepless, agitated with desire for its lord's embrace, suffers affliction as I do,—Alas !—O thou of fragrant brow.'

Dr G. U. Pope




## கிறீன் வைத்தியர்

## (Dr. Samuel Fisk Green)

[மயிலை. திரு. சீனி. வேங்கடசாமி எழுதியது]

அமெரிக்கன் மிஷன் என்னும் கிறிஸ்தவச்சங்கம் 1816-ம் ஆண்டில் யாழ்ப்பாணத்தில் நிறுவப்பட்டது. இந்த அமெரிக்கன் மிஷன் சங்கத்தார் உயர்தரக் கல்வியையும் சையன்ஸ் என்னும் சாத்திரங்களையும் கற்பிப்பதற்காக 1823-ல் வட்டுக் கோட்டை என்னும் இடத்தில் "செமினரி" யொன்றை ஏற்படுத்தினார்கள். இந்தச் செமினரி அக்காலத்தில் சர்வகலா சாலைக் கொப்பாகச் சிறப்புற்று விளங்கிற்று. உயர்தரக் கல்வியைக் கற்பித்த இந்தச் செமினரியின் விசேஷம் என்னவென்றால், இதில் தமிழ், சமஸ்கிருதம், கிரேக்கு, எபிரேய பாஷைகளும், நில அளவை சாஸ்திரம், வான சாஸ்திரம், மானுமி சாஸ்திரம் முதலிய சாஸ்திரங்களும் கற்பிக்கப்பட்டமை ஒருபுறமிருக்க, இதில் வாசித்த பிள்ளைகளுக்கு உணவு முதலியவை இலவசமாகக் கொடுக்கப்பட்டதும் இலவசமாகக் கல்வி கற்பிக்கப்பட்டதுமே யாகும். இந்தக் கலாசாலை, அக்காலத்தில் ஆசியாகண்டத்திலே யிருந்த கலாசாலைகளில் தலைசிறந்து விளங்கிற்று. இவ்விதம், அமெரிக்கன் மிஷன் சங்கம் தமிழிலங்கையில் அக்காலத்திற் செய்துவந்த தொண்டு போற்றற்பாலது.

இந்த அமெரிக்கன் மிஷன் சார்பாக கி றீன் வைத்தியர் (Dr. S. F. Green) யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த மானிப்பாய் என்னுமிடத்தில் ஒரு வைத்தியசாலையை 1847-ல் நிறுவி நோயாளர்களுக்குச் சிகிச்சைகள் செய்துவந்தார். அஃதன்றியும் அநேக மாணவருக்கு மேல்நாட்டு முறைப்படி வைத்திய சாஸ்திரத்தைக் கற்பித்துவந்தார். அமெரிக்கமிஷன் சங்கத்தார் எல்லாக்கல்வியையும் சாஸ்திரங்களையும் தேசபாஷையில் கற்பிக்கவேண்டும் என்னும் உயர்ந்த கருத்துள்ளவர்களாயிருந்தார்கள். அக் கொள்கையைப் பின்பற்றி கிறீன் வைத்தியரும் வைத்திய சம்பந்தமான சாஸ்திரங்களையெல்லாம் அறிஞர் பலரின் உதவிகொண்டு தமிழில் மொழிபெயர்த்து எழுதினார். வைத்திய சம்பந்தமான "சையன்ஸ்" நூல்களை முதல்முதல் தமிழில் வெளிப்படுத்தியவர் இவர்தாம். இதன்

பொருட்டுத் தமிழுலகம் இவருக்கு நன்றிசெலுத்தக் கடமைப் பட்டிருக்கிறது.

1856-ல் கிறீன் வைத்தியர் வைத்தியநூல் ஒன்றைத் தமிழில் எழுதி அதனை அச்சிடும் செலவை அரசாங்கத்தாரை ஏற்றுக்கொள்ளும்படி கேட்டார். அரசாங்கத்தார், அந்த நூலை ஆங்கிலமொழியில் எழுதினால் தமது செலவில் அச்சிடுவதாகத் தெரிவித்தார்கள். அமெரிக்க மிஷன் சங்கத்தின் நோக்கம் எல்லா சையன்ஸ்களையும் சாத்திரங்களையும் தேச பாஷையில் எழுதப்படவேண்டும் என்பதாகையால் கிறீன் வைத்தியர் அந்த வைத்திய நூலை ஆங்கிலத்தில் எழுதமறுத்து விட்டார். ஆகையால், அரசாங்கத்தார் அந்த நூலை அச்சிடுவதற்குப் பொருளுதவிசெய்ய முடியாதென்று சொல்லிவிட்டார்கள்.

கிறீன் வைத்தியர் தமிழ்மொழியில் இயற்றிய வைத்திய சம்பந்தமான நூல்கள்:—

அங்காதிபாதம் (Human Anatomy), சுகரணவாதம், உற்பாலனம். இம் மூன்று நூல்களும் ஒரே புத்தகமாக 1872-ல் யாழ்ப்பாணத்தில் அச்சிடப்பட்டன. கெமிஸ்தம் (Chemistry) "இது வெல்சு பண்டிதர் இங்கிலீஷில் இயற்றிய நூலிலிருந்து, பாஷாந்தரமாக்கலில் த.வி. சப்மன் வைத்தியனுடைய உதவியையும் பரிபாஷையாக்கலில் ர. சுவாமிநாதன் வைத்தியனுடைய உதவியையும் கொண்டு சமுபல், பி. கிறீன் வைத்தியனால் மொழிபெயர்க்கப்பட்டது. யாழ்ப்பாணம் அமெரிக்க இலங்கை மிஷனுக்காக நாகர்கோவில் லண்டன் மிஷன் அச்சியந்திரசாலையில் பதிப்பிக்கப்பட்டது: 1875"

Vocabularies of Malaria Medicate and Pharmacy. இந்தநூல் 1875-ல் நாகர்கோவில் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது. இதனையும் கிறீன் வைத்தியர் தமிழில் எழுதி வெளியிட்டார். இந்நூலை யான் பார்த்ததில்லை. ஆகையால் இதன் தமிழ்ப்பெயர் இன்னதென்று தெரியவில்லை.

கிறீன் வைத்தியர் வைத்திய சம்பந்தமாக, மேலைத்தேசத்துச் சிகிச்சை முறைப்படி ஒன்பது நூல்களைத் தமிழில் எழுதி வெளியிட்டார் என்று தெரிகிறது. அவற்றில் மேற்சொன்ன ஐந்து நூல்கள் இப்போது அருமையாகச் சிற்சிலரிடத்தில் கிடைக்கும். ஏனைய நான்கு நூல்களின் பெயர்தானும் தெரியவில்லை. அந் நூல்களைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டியது தமிழ்மொழி முன்னேற்றத்தில் கருத்துடையவர்களின் கடமையாகும். அன்றியும் கிறீன் வைத்தியர் எழுதி வெளி

யிட்ட அந்த ஒன்பது நூல்களும் மீண்டும் அச்சிடப்படவேண்டும். இத்தகைய வேலையை, சென்னை மாகாணத் தமிழர் சங்கம் போன்ற பெரிய சங்கங்கள் செய்ய மேற்கொள்ள வேண்டும்.

இவையன்றியும்,இலங்கையிலிருந்த அமெரிக்கன் மிஷன் சங்கத்தாரின் சார்பாக வீசகணிதம், நியாயசாஸ்திரம் (தர்க்க நூல்), வானசாத்திர முதலிய நூல்களும் தமிழில் பல ஆண்டுகளுக்குமுன் அச்சிடப்பட்டன. அந்த நூல்களும் இப்போது கிடைப்பது அருமை.

---

# அளகிரி

## (கி. பி. 1673—1685)

[திருவாளர் வித்துவான் கி. சாமிக்கண்ணு அவர்கள்]

தோற்றுவாய்:—விசயராகவ நாயக்கரும் மன்னாரப்ப நாயக்கரும் போரிலிறந்த பிறகு தஞ்சாவூர் நாட்டை ஆளும்படி சொக்கநாத நாயக்கர் தமது செவிலித்தாயின் மகனை அளகிரியை ஏற்படுத்தினார்.

வரலாறு:—அளகிரி, சின்னாட்களுக்கெல்லாம், தாமே தஞ்சாவூருக்கு மேலதிகாரியாய் விட்டார். செலவு சிற்றாயங்கள் போக எஞ்சிய தொகையைச் சொக்கநாத நாயக்கருக்கு அனுப்புவதை நிறுத்திவிட்டார். கடிதப்போக்கு வரவுகளில் நட்பரசர்கள் ஒருவருக்கொருவர் எழுதுவதுபோலெழுதினார். இதைப்பற்றிச் சொக்கநாத நாயக்கர் கண்டித்தெழுதினார். அளகிரி, தஞ்சாவூர் அரசர் திருசிராப்பள்ளி யரசருக்கு எழுதுவதுபோலத் தாமும் எழுதினதேயொழிய வேறில்லையென்றெழுதினார். சொக்கநாத நாயக்கருக்கு அளகிரியை வென்று மறுபடியும் தஞ்சாவூரைக் கைப்பற்றிக் கொள்வது முடியாதென்று தோன்றிற்று. மேலும், அளகிரியை அண்ணன் என்று அதுவரையில் அவர் உறவாடி வந்துவிட்டார். ஆகையால் அவர் பிற்காலத்தில் தஞ்சாவூரையும் அளகிரியையும் கவனிக்கவில்லை.

இவ்வாறிருக்கையில் முன் விசயராகவ நாயக்கரிடத்தில் திருமந்திரவோலை வேலைபார்த்துவந்த வெங்கண்ணா என்ற நியோகி பிராமணர், அரசவழியிற் பிறந்த செங்கமலதாசு செட்டிவீட்டில் வளருவதையும் வாழ்க்கை நடத்துவதற்குத்

தடுமாறுவதையும் அறிந்தார். தாதியின் மகனான அளகிரி கொலுவிலிருந்து அரசு செலுத்துவதைக் கண்டு உள்ளம் கொதித்தார். அப்பொழுது பன்னிரண்டு ஆண்டினனாக இருந்த செங்கமலதாசை யழைத்துக்கொண்டு அவர் பீசப்பூர் சுல்தானிடம் சென்றார். சுல்தானிடத்தில் செங்கமலதாசைப் பற்றிய வரலாறனைத்தையும் உள்ளதுள்ளவா றெடுத்துரைத்தார்.

சொக்கநாத நாயக்கர் தஞ்சாவூரை அறநெறி திறம்பிக் கைப்பற்றியதாகச் சுல்தானுக்கு மனதில் படும்படி செய்தார். சுல்தான், ஷாஜியின் குமாரரும், ஆதி சிவாஜி மன்னனின் தம்பியுமாகிய வெங்காஜியை வருவித்துத் தஞ்சாவூருக் கனுப்பிச் செங்கமலதாசுக்குப் பட்டங்கட்டி அரியணையில் அமர்த்தி விட்டுத் திரும்பும்படி சொன்னார். செங்கமலதாசு, வெங்காஜியுடன் தஞ்சாவூருக்குத் திரும்பினார்.

வெங்காஜி திரண்ட குதிரைப்படையுடன் படையெடுத்துச் சென்று தஞ்சாவூருக்கு ஏறக்குறைய ஆறேமுக்கால் நாழிகை தூரம் கிழக்கிலுள்ள ஐயம்பேட்டையில் பாளையம் இறங்கினார். இஃதறிந்த அளகிரி நாயக்கர், சொக்கநாத நாயக்கருக்குக் கடிதம் எழுதினார். அக்கடிதத்தில் பிற தேசத்துத் திருந்தார் தஞ்சாவூரைப் பறித்துக் கொள்ளாதவாறு அவர்களை முறியடித்துச் சொக்கநாத நாயக்கரே நாட்டுக்கு நல்லரசு செலுத்தவேண்டும் என்று வணக்கமாய்த் தெரிவித்திருந்தார். சொக்கநாத நாயக்கரது அமைச்சர்களும் அளகிரிக்கு உதவிசெய்தல் தக்கது என்று தமது கருத்துக்களை வெளியிட்டார்கள். ஆயினும் சொக்கநாத நாயக்கர் அளகிரியினிடத்தில் தீரா வெறுப்புக்கொண்டு வாளா யிருந்துவிட்டார். ஐயம்பேட்டையில் நடந்த சண்டையில் அளகிரி தோல்வியடைந்து முறியடிக்கப்பட்டுத் தஞ்சாவூருக்கு ஓட்டம் பிடித்தார். வெங்காஜி அவரைத் துரத்திக்கொண்டு பின்றொடர்ந்தார். அளகிரி தஞ்சாவூரை நீத்துப் போனவிடம் தெரியாமல் ஓடிப்போனார்.

---

## செங்கமலதாசு நாயக்கர் கி. பி. 1685—1687

தோற்றுவாய் :—செங்கமலதாசு நாயக்கர், இந்த நாயக்க அரசவழியின் ஐந்தாவது மன்னர். அவர் மன்னாரப்ப நாயக்கருக்கு மகன். விசயராகவ நாயக்கருக்குப் பேரன். நாகபட்டினத்தில் ஒரு செட்டிவீட்டில் தன் தாயின் வேலைக்காரி ஒருத்தியால் வளர்க்கப்பட்டவர். வெங்கண்ணு

வின் முயற்சியால் வெங்காஜியின் துணைகொண்டு அளகிரியை வென்று தமது அரசுரிமையைக் கைக்கொண்டார்.

வரலாறு:—ஐயம்பேட்டையில் நடந்த போரில் வெற்றி பெற்றவுடன் செங்கமலதாசை யானையின் மேல் வைத்துத் தஞ்சாவூருக்கு அழைத்துக்கொண்டுபோய் அவருக்கு முடி சூட்டினார்கள். வெங்காஜிக்கும் மற்றோருக்கும் பரிசுகள் அளிக்கப்பட்டன. இந்நிகழ்ச்சிகள் ஏறக்குறைய கி. பி. 1685-ல் நடந்தன. கும்பகோணம் கோட்டத்திலிருந்து துரைத்தனத் துக்கு ஆண்டுதோறும் சேரும் வரும்படி முழுவதும் சேனைச் செலவுக்கென்று வெங்காஜியிடத்தில் ஒப்புவிக்கப்பட்டது. அவர் அவ்வரும்படியைத் தாமே வசூல்செய்துகொண்டு தமது சேனையுடன் திருக்குடந்தையில் தங்கியிருந்தார்.

இவ்வாறிருக்கையில், கோமகனுக்கு உற்ற அமைச்சராக யாரை ஏற்படுத்தலாம் என்ற கேள்வி பிறந்தது. அப்பொழுது செங்கமலதாசு தம்மை வளர்த்துவந்த தாயினிடத்தில் யோசனை கேட்டார். அவள் தங்களை நாகபட்டினத்தில் காப்பாற்றி வந்த செட்டியே அமைச்சராயிருக்க ஏற்றவர் என்றாள். செங்கமலதாசு அவளது கருத்துக்கிசைந்து செட்டியை அமைச்சராக ஏற்படுத்தித் தமது முத்திரையையும் அவரிடத்தில் ஒப்புவித்து அமைச்சருக்குரிய வெகுமதிகளை யும் அவருக்களித்து அவரைப் பட்டத்து யானைமே லேற்றி ஊர்வலம் செய்துவைத்தார். வெங்கண்ணாவினது முயற்சியினாலல்லது செங்கமலதாசுக்கு அரசுரிமையே கிடைத்திராது. அவர் விரும்பியது அமைச்சரது அதிகாரம். அது செட்டியி னுடைமையாயிற்று. அவருங்கூட செட்டியின் சொல்லுக்கு அஞ்சி நடக்கவேண்டியதாயிற்று. ஆனதுபற்றி அவர் மிக்க மனவருத்தம் உற்றுத் திருக்குடந் தைக்கு வெங்காஜியினிடத்தில் ஏகித் தஞ்சாவூரைப் பிடித்துக் கொண்டு அவ்விடமிருந்து அரசு செய்யும்படி வெங்காஜியைத் தூண்டுதல் செய்தார். வெங்காஜி, இச்சங்கதி சுல்தானுடைய காதிற்பட்டால் தம்மை யவர் கோபித்துக் கொள்வாரென்று சொல்லிச் சிலநாள் பயந்தார். பிறகு சில நாளைக்கெல்லாம் சுல்தான் காலஞ்சென்று விட்டாரென்னும் செய்தி காதுக் கெட்டிற்று. வெங்காஜி அச்சமற்றுத் தம்மைத் தஞ்சாவூரில் நிலைநாட்டிக்கொள்ளத் தீர்மானித்தார்.

செங்கமலதாசு அச்செய்திகேட்டுப் பயந்து, கொள்ளிடத் துக்கு வடகரையிலுள்ள அரியலூருக்கு ஓட்டம்பிடித்துத் தப் பித்துக் கொண்டார். பிறகு தஞ்சாவூர் நாயக்க அரச வழி யைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை,

முடிவுரை:—வெங்காஜி தமது சேனையுடன் தஞ்சாவூருக்கு வந்துசேர்ந்தார். தாமே தஞ்சாவூர் நாட்டுக்குக் காவலனானார். இவ்வாறு நாயக்க அரசவழி அழிபட்டு மகாராட்டிர அரசவழி தஞ்சாவூரில் கால்கொண்டது.

---

## சாமுவேல் மோர்ஸ் (Samuel F. B. Morse)

[நெல்லை திரு. குழந்தைவேலன் அவர்கள் B. A.]

மின்சாரத்தின் உதவியால் செய்திகளை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு அனுப்பும் (தந்தித்தபாலைக்) கம்பிச்செய்தியைக் (Telegraph) கண்டுபிடித்தவர் சாமுவேல் மோர்ஸ் என்னும் பேரறிஞர் ஆவர். இவர் 1791-ஆம்ஆண்டு ஏப்ரல் திங்கள் 27-ஆம் நாள் அமெரிக்காவில் சார்ல்ஸ் டவுன் (Charles Town என்னும் ஊரிற் பிறந்தவர். *இவர் இளமையில் ராண்ட் (Rand) என்னும் ஓர் ஆண்டுமுதிர்ந்த அம்மையாரிடம் கல்விபயின்று வந்தார். அவ் வம்மையார் குறும்புசெய்யும் சிறுவர்களை அடக்குவதற்கு மிகவும் நீண்ட பிரம்பு ஒன்று வைத்திருந்தார். இதன் உதவியால் அவர் தமது இருப்பிடத்தை விட்டு எழுந்திராமலே பிள்ளைகளை அடிப்பது வழக்கம். ஒரு நாள் மோர்ஸ் தமது மேஜையின்மேல் ஆசிரியரைப்போன்று வேடிக்கையான படம் ஒன்று வரைந்து வைத்தார். இது கண்ட ஆசிரியர் மிகவும் சினந்து மோர்ஸின் சட்டைத் துணியைத் தமது ஆடையுடன் சேர்த்து ஓர் ஊசியினால் தைத்து அவர் தம்மை விட்டு அகலாது இருக்கும்படி செய்தனர். ஆயினும் மோர்ஸ் துணியைக் கிழித்துக்கொண்டு தப்பி ஓடிவிட்டார்.

இவருக்கு ஓவியம் வரைவதில் இளமைப்பருவத்திலேயே ஏற்பட்ட பேரவா நாளடைவில் முதிர்ச்சியுற்றது. இவர் கலாசாலையிற் கல்விபயின்று வருங்காலையில் தம்முடன் பயின்ற மாணவர்களது படங்களை வரைந்து கொடுத்து அதனாற் கிடைத்த பொருளைத் தமது செலவிற்குப் பயன்படுத்திவந்தார். இவர் மாணவராக இருக்கும்பொழுதே அறிவியல் ஆராய்ச்சிகளில் மிகுந்த திறமையுடையவராய்க் காணப்பட்டார். இவர் தமது கல்விப்பயிற்சி ஏல் பல்கலைக்கழகத்தில் முடிந்தவுடன் ஓவியம் வரைவதிலேயே தம் வாழ்நாளைச் செலவிட எண்ணி மூவாயிரம் கல் தொலைவிலுள்ள லண்டன்மா நகருக்குச்சென்று அங்கு ஓவியப் பெரும்புலமையும்பெற்றார். ஆங்கு ஓவியம் வரை

* இவர் தந்தையார் பாடபுத்தக ஆசிரியராயும் போராசிரியராயும் விளங்கிய ஒரு பெரியவராவர்.

வதில் இவருக்குச் சிறிது பொருளே கிடைத்தது. இவர் சிறிதும் சோர்வின்றி ஊக்கத்துடன் உழைத்து வந்ததால் இவர் அரசர் கல்லூரியில் (Royal Academy) ஓர் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார்.

லண்டன்மா நகரில் இவருக்குப் போதிய வருவாயின்மையால் இவர் அமெரிக்காவுக்குத் திரும்பிச்சென்று படங்கள் எழுதி விற்றுவந்தார். இவர் ஓவியம் வரையாத நேரங்களில் அறிவியல் ஆராய்ச்சிகள் செய்வது வழக்கம். இவற்றின் பயனாக இவர் ஒரு புதிய தண்ணீர் குழாயைச் (pump) செய்து அதனால் சிறிது பொருள் சேர்த்தார். இவர் மீண்டும் ஐரோப்பாவிற்குச்சென்று சிலகாலம் தங்கியிருந்து 1831-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் முதலாம் நாள் சல்லி (Sully) என்னும் கப்பலிற் புறப்பட்டு அமெரிக்காவுக்கு மீண்டும் வந்து சேர்ந்தார். வரும் வழியில் கப்பலில் பாரடே (Faraday) என்னும் அறிஞரைப்பற்றியும், அவர் மின்சாரத்தால் உண்டாகும் மின் ஆற்றலைக் (Electro-magnetism) கண்டு பிடித்தது பற்றியும் கேள்விப்பட்டார். உடனே மோர்ஸுக்கு ஓர் எண்ணம் தோன்றிற்று: "ஏன் மின்சார ஆற்றலால் நம் எண்ணங்களை ஓரிடத்தினின்றும் மற்றொரிடத்திற்கு அனுப்பக்கூடாது?" என நினைக்கலாயினர். ஆதலால் அன்றிரவு முழுவதும் அவர் உறங்கவே இல்லை. ஒரு தாளில் ஆங்கில எழுத்துக்கள் 26-க்கும் (Dash) புள்ளிகளாலும் (Dot) கோடுகளாலும் பின்வருமாறு அடையாளங்கள் எழுதினார் :—

A என்னும் எழுத்திற்கு ஒரு புள்ளியும் ஒரு கோடும் ( . — )
B எழுத்திற்கு ஒரு கோடும் மூன்று புள்ளிகளும் ( — . . . )
C எழுத்திற்கு ( — . — . )
D எழுத்திற்கு ( — . . )

இங்ஙனமாகப் புள்ளிகளையும் கோடுகளையும் 26 வகைகளாக மாற்றியமைத்துத் தந்திக் குறிகளைக் கண்டுபிடித்தார்.

நியூயார்க் (New york) நகருக்கு வந்து சேர்ந்தவுடன் மோர்ஸ் (தந்திக்கம்பிக்) கருவி ஒன்று அமைத்தார். இக்கருவியில் காகிதம் குறுக்கே நகர்ந்து செல்லும்படியும் எழுதுகோல் (pencil) மேலுங்கீழும் செங்குத்தாய் அசையும்படியும் செய்யப்பட்டிருந்தது. காகிதம் கடிகாரச் சக்கரங்களின் உதவியால் சுழன்றது. எழுதுகோல் மின்சாரக் கம்பியோடு இணைக்கப்பட்டு அதன் உதவியால் இயங்கிற்று. (தந்திக்) கம்பிக்கருவி எவ்வாறு வேலைசெய்கிறதென்பதைச் சற்று ஆராய்வோம்:—

எழுதுகோல் காகிதத்தின்மேல் பொருந்தியிருக்கும்பொழுது புள்ளி அல்லது கோடு விழுகிறது. இவ்வாறு ஒருகண்ணிமைப் பொழுது பொருந்தி இருந்தால் ஒரு புள்ளி விழும். நேரம் சற்று மிகுதிப்படின் ஒரு கோடு விழும். அயலிடத்தினின்றும் தந்தி அடிப்பவர் மின்சாரப்பொத்தானை "கடகட" "கட் கட" என்று நிறுத்தி நிறுத்தி அடிப்பதால் கம்பியின் மற்றொரு முனையிலிருக்கும் பென்சில் புள்ளிகளாலும் கோடுகளாலும் பல்வேறு தந்தி எழுத்துக்களை வரைகின்றது. இதனால் நெடுந்தொலைவிலிருந்து நமக்கு மிக எளிதிற் செய்திகள் மின்சாரக்கம்பி வழியாக வந்து சேருகின்றன. இங்ஙனமாக நிமிடத்திற்கு 60 முதல் 100 வார்த்தைகள் (சொற்கள்) வரை அனுப்பலாம்.

மோர்ஸ் தாம் கண்டுபிடித்த கம்பிச்செய்தியை மக்களுக்குப் பயன்படும்முறையில் அமைப்பதற்கு அரும்பாடுபட்டார். அதற்கு வேண்டிய பொருளுதவியின்றி இவர் மிகவும் வருந்தினர். இதனால் இவர் தமது ஆராய்ச்சியையும் நிறுத்திவிட எண்ணினர். நல்வினையின் பயனாக 1835-ஆம் ஆண்டில் இவருக்கு நியூயார்க் பல்கலைக்கழகத்தில் ஓர் ஆசிரியர் பதவி கிடைத்தது. ஆகவே இவர் மீண்டும் தம் ஆராய்ச்சிகளை நடத்தத் தொடங்கினர். மின்சாரச் செய்தியை நெடுந்தொலைவுக்கு அனுப்பும்போது அதன் ஆற்றல் குறைந்து தந்தி அடிப்பதற்குத் தடை ஏற்பட்டது. மோர்ஸ் தளரா ஊக்கத்துடன் வருந்தி உழைத்து மின்சார ஆற்றல் குன்றுதிருக்கவும், அதனை மேன்மேலும் புதுப்பித்துக்கொண்டு நெடுந்தொலைவிற்குச் செலுத்தவும் வழிகளைக் கண்டுபிடித்தார். 1837-ஆம் ஆண்டில் ஆல்பிரேட் வேய்ல் (Alfred Veil) என்பவரது உதவி கொண்டு மோர்ஸ் தம் தந்திக்கருவிகளை நல்ல முறையில் அமைத்து அவற்றை வாஷிங்டன் (Washington) நகரில் நடந்த பொருட்காட்சிச் சாலைக்கு எடுத்துச்சென்றார். மக்கள் அவற்றைக் கண்டு வியப்பெய்தினர். ஆயினும் தந்திக் கம்பிகள் அமைப்பதில் தங்கள் பொருளைச் செலவிட எவரும் துணியவில்லை.

மோர்ஸ் மூன்றும் முறையாக ஐரோப்பாவிற்குச்சென்று லண்டன், பாரிஸ் (Paris) முதலிய நகரங்களில் தமது ஆராய்ச்சியாற் கண்டுணர்ந்த உண்மைகளை வெளியிட்டார். ஆங்கில அறிஞர்கள் அனைவரும் இவர்தம் திறமையைப் போற்றிப் புகழ்ந்தனர். ஆயினும் மோர்ஸின் வறுமை நீங்குதற்கு வழி ஏற்படவில்லை. ஆகவே இவர் கையில் ஒரு காசுமின்றி நியூயார்க் திரும்ப நேர்ந்தது. இவர் தமது உணவிற்குங்கூடக் கடன்

வாங்க வேண்டியதாயிற்று. அந்தோ! வறுமையின் கொடுமை தான் என்னே! இன்மையின் இன்னாதது யாது உளது?"

மோர்ஸ் வாஷிங்டன் நகருக்கு மீண்டும் ஒரு முறைசென்று நகரமன்றத்தினரை யணுகித் தமக்குப் பொருளுதவிபுரியுமாறு வேண்டினார். ஆங்கு இவருக்கு மிகுந்த எதிர்ப்பு ஏற்பட்டும் இவர் தமது விடாமுயற்சியால் வெற்றிபெற்றார். வாஷிங்டனுக்கும் பால்ட்டிமோருக்கும் (Baltimore) இடையில் தந்திக் கம்பி அமைக்கும்படி மோர்ஸுக்கு உத்தரவு கிடைத்தது. இச்செலவிற்கு முப்பதாயிரம் டாலர்கள் அளிக்கப்பட்டன. இந்நற்செய்தியைக் கேட்டு மோர்ஸ் இன்பக்கடலில் மூழ்கினார். தந்திக்கம்பி வேலை முடிவுபெற்றதும் அதற்குரிய கருவிகள் வாஷிங்கடன் உயர்முறைமன்றத்தின் (Supreme Court) ஓர் அறையில் வைக்கப்பட்டன. வேடிக்கை பார்ப்பதற்காக நகர மாந்தர் அனைவரும் கூடி இருந்தனர். மோர்ஸ் இறைவனிடத்து இடையறாப் பேரன்புபூண்டு ஒழுகுபவர். ஆகலின் முதன்முதலாக "எல்லாம் இறைவனால் ஆக்கப்பட்டவை" என்னும் செய்தியைத் தந்திமூலமாய் பால்ட்டிமோர் நகருக்கு அனுப்பினார். வெய்ல் என்னும் அறிஞர் அச்செய்தியைப் பால்ட்டிமோரில் பெற்றுக்கொண்டு மீண்டும் அதனைத் தந்தி மூலம் வாஷிங்டனுக்கு அனுப்பினார். அங்குக் குழுமியிருந்த மக்கள் அனைவரும் இப்புதிய வியத்தகு செயலைக் கண்டு பேருவகை எய்தினர். மோர்ஸ் 1832-ஆம் ஆண்டில் தொடங்கிய ஆராய்ச்சி 12 ஆண்டுகளுக்குப்பின் முடிவுபெற்றது. மோர்ஸின் புகழ் நாடெங்கும் பரவத் தலைப்பட்டது.

மோர்ஸினால் கண்டுபிடிக்கப்பெற்ற தந்திமுறை எடிசன் (Edison) முதலிய மின்சார வல்லுநர்களின் முயற்சியால் மிகச்சிறந்த முறையில் மாற்றி அமைக்கப்பட்டது. ஒரே தந்திப்பாதை உள்ள இடங்களில் ஒரு செய்தி கம்பியின் வழியாகப் போய்க்கொண்டிருக்கும்போது அதற்கு எதிராக மற்றொரு செய்தியை அனுப்பும் வழிகண்டுபிடிக்கப்பட்டது. இதற்குப்பின் ஒற்றைக் கம்பியில் ஒரே நேரத்தில் நான்கு செய்திகளை அனுப்பும் முறையும் கண்டுபிடிக்கப்பட்டது. இதனால் தந்திப் போக்குவரத்துக்குரிய கம்பிகளின் தொகை குறைந்து செலவும் சுருங்கிற்று. இவையுமன்றிக் குறைந்த நேரத்தில் மிகுந்த செய்திகள் எளிதாய் அனுப்பமுடிந்தது.

வாஷிங்டன் தந்தி நிலையம் நிறுவிய சில ஆண்டுகளுக்குள் அமெரிக்காவிலும் ஏனைய நாடுகளிலும் எங்கே பார்த்தாலும் தந்திக்கம்பிகள் அமைக்கப்பட்டன. மோர்ஸுக்குச் செல்வம் வந்து குவிந்தது. இவர் தமக்கு ஓர் அழகிய மாளிகை

கட்டினார். அம்மாளிகையில் தமது அறையில் தந்திக்கருவி களை யமைத்து அவற்றின் உதவியால் இவர் உலகின் பல்வேறு இடங்களிலுள்ள மக்களோடும் தந்திப் போக்குவரத்து வைத்துக்கொண்டார். அரசியலார் இவர்க்குச் சிறந்த பட்டங்கள் வழங்கினார்கள். நகரங்கள்தோறும் இவருக்கு வரவேற்புகளும் வாழ்த்துக்களும் அளிக்கப்பட்டன. "பணியுமாம் என்றும் பெருமை" என்பதற்கிணங்க மோர்ஸுக்குச் செல்வம் வந்துற்ற காலையும் செருக்கின்றி மிகவும் பணிவுடன் நடந்து கொண்டார். இவர் தாம் வறுமைப்பிணியால் துன்புற்றதை ஒருபொழுதும் மறந்துவிடவில்லை. இவர் ஓவியம் வரைபவர்களைப் பெரிதும் ஆதரித்துவந்தார். அவர்களது படங்களைப் பெரும் பொருள்கொடுத்து வாங்கி ஊக்கிவந்தார். 1871-ஆம் ஆண்டில் அறிஞர் பலர் ஒருங்குசேர்ந்து நியூயார்க் நகரில் இவரது உருவச்சிலை ஒன்று அமைத்து இவரைப் பெருமைப்படுத்தினர். கொடை வள்ளலாகிய மோர்ஸ் 1872-ஆம் ஆண்டில் இறைவன் திருவடிநிழலை எய்தினார்.

"ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதிய மில்லை உயிர்க்கு"

---

# ஆனைந்து

[திரு. துடிசைகிழார் அ. சிதம்பரனார்]

I முகவுரை அல்லது எல்லோருக்கும் பொதுவான ஆனைந்து.

"ஆனைந்து" என்பது தமிழ்மொழி. தென்தமிழாளர் ஆனைந்து என்றும், வடதமிழாளர் "பஞ்ச கௌவியம்" என்றும் கூறுவர்.

"ஆன் ஐந்து" "பஞ்ச கௌவியம்" என்ற பதங்களுக்குச் சாதாரணமாக எல்லாரும் பசுவினிடத்திலிருந்து உண்டாகும் ஐந்து பொருள்கள் என்றுதான் பொருள் கொண்டிருக்கிறார்கள்.

ஒருவரும் ஐந்து பொருள்கள் என்னென்ன என்று நிதானித்துப் பார்த்தவர்கள் அல்ல. ஆவினிடத்திலிருந்து ஐந்து பொருள்கள் தனித்தனியாக ஐந்து இடங்களிலிருந்து உண்டாகவேண்டும். அப்படி உண்டாகின்றனவா அப்பொருள்கள் என்று பார்த்தவர் தாமும் இல்லை.

ஆனைந்தோ சிவபெருமானுக்கு உகந்தது. அவன்

"ஆவிலைந்துகந்தாடும் பரமன்" ஆனைந்து இல்லாவிட்டால் சிவபிரானுக்கு வேறு எதனைக்கொண்டு முழுக்காட்டினாலும் பயன் இல்லை.

தமிழ்வேதங்களிலும், ஆகமங்களிலும், ஆனைந்தைப்பற்றியே சிறப்பாகக் கூறப்பட்டிருக்கிறது.

இத்தகைய சிறப்புவாய்ந்த ஆனைந்தை, உலகில் சிலபேர் "சாணிச்சாறு" என்று ஒதுக்கிவைத் திருக்கிறார்கள்.

வைணவர்கள் கங்கையைச் "சடைச்சார்" என்று கூறி அதனில் முழுகாதும் அதன் பயனைப் பெறாதும் போவது போல என்று கூடச் சொல்லுவதற்கில்லை. ஏனென்றால் சாணி சேர்ந்த ஆனைந்து "சாணிச்சாறே"

தமிழ் நாட்டில் சைவர் இல்லங்களிலும் ஏனையோர் இல்லங்களிலும் எல்லாச் சுப அசுப காரியங்களிலும் ஆனைந்து இல்லாமல் முடியாது.

திதிகாரியங்களிலும் ஆனைந்து உண்டு.

ஆனால், ஆரியர் இல்லங்களிலும் ஆரிய மதத்தைப் பின் பற்றின தமிழர் இல்லங்களிலும் திதிகாலங்களில் ஆனைந்து உபயோகிப்பதே இல்லை.

தீட்டைப் போக்குகிறதற்கு மாத்திரம் உபயோகிக்கிறார்கள். தீட்டு என்பது இழவுத்தீட்டு, குழந்தை பிறந்த தீட்டு முதலியன.

சிவபெருமானுக்கு உகந்த ஒன்றை ஒரு வகுப்பார் "சாணிச்சாறு" என்று இகழ்வதற்கும், பிராமண மதத்தை அநுசரித்தவர்கள் திதிகாரியங்களில் உபயோகப்படுத்தாமல் இருப்பதற்கும் காரணம் என்ன என்று ஆராயத்தொடங்கினேன்.

ஆனைந்து (=பஞ்ச கௌவியம்) என்பது சாதாரணமாக (1) பால் (2) தயிர் (3) நெய் (4) கோசலம் (5) கோமயம் இவ்வைந்துமே என்று தற்காலம் பலர் கொண்டிருக்கிறார்கள். அவ்வண்ணமே கூட்டியும் உபயோகிக்கிறார்கள்.

ஆனைந்தின் ஐந்து பொருள்களை மேற்சொன்ன பிரகாரம் தெரிந்துகொண்டவுடன், சிலபேர் அதனைச் "சாணிச்சாறு" என்று தள்ளிவைத் திருப்பதற்குக் காரணம் விளங்கிவிட்டது; ஏனென்றால் பசுவின் சாணியும் மூத்திரமும் சேர்ந்ததனாலேதான்.

ஆனைந்தை ஒதுக்கிவைத் திருப்பவர்களைத் தவிர உபயோகப்படுத்துகிறவர்களைக் கவனித்துப் பார்த்து வந்தேன்,

அவர்களும் வேண்டா வெறுப்பாகக் கையில்வாங்கி வாயில் விடும் பாவனையாய்க் கீழே விட்டுவிடுகிறார்கள். ஆசாரியரும் அதனைக் கவனியாது இருந்து விடுகிறார்.

போகட்டும், இதுதான் இப்படி என்றாலோ! கோயில்களில் சிவபெருமானுக்கு ஆனைந்தைக்கூட்டி (அஃதாவது சாணி, மூத்திரம் இவைகளைக் கூட்டி) உபயோகப் படுத்துகிறார்களா என்றால் அதுவும் காணோம்.

பால், தயிர், நெய், பஞ்சாமிர்தம், தேன், இளநீர், இவைகளைக்கூட்டி ஆட்டுகிறார்களேயன்றி, எந்தச் சிவன் கோயிலினும் ஆனைந்து கூட்டி ஆட்டுகிற வழக்கமே இல்லை.

நானும் பல குருக்கள்மாரைக் கேட்டேன். அவர்கள் "பஞ்ச கௌவியம் கூட்டி ஆட்டும் வழக்கம் இல்லை. ஆனால் யாகசாலையில் உபயோகப்படுத்துவது உண்டு. அது வேள்வி செய்யும் குருக்களின் சுத்தியின்பொருட்டு. சிவபெருமானுடைய முழுக்குக்கு பஞ்ச கௌவியம் கிடையாது" என்று கூறினார்கள்.

ஆவிலைந் துகந்தாடும் பரமனார்க்கே ஆனைந்து இல்லையென்றால் இந்தக் குருக்கண்மார் செய்யும் முழுக்கெல்லாம் அவமேயாகும். ஏன் அப்படி ஆயிற்று என்றால் குருக்கள்மார்கள் எல்லாம் ஆரிய ஸ்மிருதியைப் பின்பற்ற ஆரம்பித்தார்கள். அந்தக் காலந்தொட்டு ஆனைந்து நின்றுவிட்டது. ஆகையால், இன்னும் எனக்கு இதில் சந்தேகம் அதிகமாயிற்று.

மேலும், இன்னொரு ஐயமும் உண்டாயிற்று. அஃதாவது, ஆவினிடத்திலிருந்து ஐந்து பொருள்கள் உண்டாக வேண்டுமே; அவை ஐந்து இடங்களிலிருந்து வந்தவையா யிருக்க வேண்டுமே; என்பது.

பசுவின் மடியிலிருந்து பாலும், பசுவின் நீர்த்தாரையிலிருந்து கோசலமும், பசுவின் குண்டியிலிருந்து கோமயமும் ஆக மூன்று இடங்களிலிருந்து மூன்று பொருள்களே தானே பெறுகிறோம்; ஐந்து பொருள்கள் எப்படி ஆயிற்று? மூன்று ஐந்தாகுமா?

ஒரு சமயம் பசுவின் மூக்குநீர், வாய்நீர், இரண்டையும் சேர்த்தால் ஐந்து ஆகலாம்; அப்படியும் காணோம். மூன்று பொருள்களை ஐந்தாக உலகத்துக் காட்டும் மாயவித்தையே வித்தை.

தற்காலம் ஆரியக் குருக்கள்மாரும் அவர்களைப் பின்பற்றின தமிழ ஆசாரியர்களும் இம்மூன்றிடங்களில் இருந்து

உண்டாகும் மூன்று பொருள்களோடு, பாலின் திரிபாகிய தயிர், நெய் இரண்டையும் சேர்த்து ஐந்து என்ற கணக்குக்கு ஒப்படைத்துவிட்டு அதனைப் பஞ்ச கௌவியம் என்று வழங்குகிறார்கள். பாலின் திரிபு தயிர், மோர், வெண்ணெய், நெய், என்று நான்காயிருக்க அவைகளில் இரண்டைமாத்திரம் எடுத்துக்கொண்டு, பாக்கி இரண்டையும் தள்ளிவிடுவானேன்?

சிவதருமோத்திரமோ பால், தயிர், நெய், கோசலம், கோமயம், கோரோசனை இவ்வாறையும் பஞ்ச கௌவியம் என்று கூறுகிறது. இஃது ஐந்தை ஆறாகக் காட்டுகிறது. இதுவும் ஒரு விந்தையே. ஒரு காலத்திலும் ஐந்து ஆறு ஆகாது, மூன்றும் ஐந்து ஆகாது. ஆறு பொருள்களைக்கூறி பஞ்சகௌவியம் என்பது எப்படி என்பது தெரியவில்லை. வாசகர்களே அறிந்து கொள்ளுவார்களாக. சிவதருமோத்திரப் பிரகாரம் பார்த்தாலும் பால், கோசலம், கோமயம், கோரோசனை நான்கு பொருள்களே ஆகின்றன; ஐந்து ஆகவில்லை. நான்கும் ஐந்து ஆகாது.

மேலும் வழக்கத்தில், ஒருவரும் பஞ்ச கௌவியத்திற்குக் கோரோசனை சேர்ப்பது கிடையாது. வழக்கத்திலில்லாத பொருள்களைச் சிவதருமோத்திரம் கூறுவது ஏட்டுச் சுரைக்காயாய் முடிந்தது.

இதுவரை கூறிவந்தவைகளைக் கொண்டு உலகத்தில் "சாணிச்சாறு" என்று ஆனைந்தை அறவே நீக்கிவிட்டவர்கள் ஒரு பிரிவார். அந்தச் "சாணிச்சாறை" உபயோகப்படுத்துபவர்கள் இன்னொரு பிரிவார் என்று கண்டோம். மேற்சொன்ன இரு பிரிவார்களைத்தவிர சுத்தத் தமிழ் முறையைக் கையாண்டுவரும் சிலபேர்களைக் கவனித்துவந்தேன். அவர்கள் எல்லாம் கோசலம், கோமயம் இவைகளை உபயோகிப்பதே இல்லை. ஆனால், அவர்கள் பால், தயிர், நெய், மோர், வெண்ணெய், இவைகள் ஐந்தையும் ஆனைந்தாகக் கொண்டிருக்கிறார்கள்.

இவ்வைந்து பொருள்களும் ஒரே இடத்திலிருந்து உண்டானவைகள்.

இவ்வழக்கமானது ஒருவாறு ஒத்துக்கொள்ளக் கூடியதாயிருக்கிறது.

ஆவின் மூன்றிடங்களில் இருந்தோ, நான்கிடங்களில் இருந்தோ உண்டாகும் "மூன்று" அல்லது "நான்கு" பொருள்களை "ஐந்து" என்று கூறுவதைவிட ஒரே இடத்திலிருந்து

உண்டாகும் ஒரு பொருளை அஃது ஐந்தாக மாறும்போது ஆனைந்து என்று கூறுவது இயற்கையாகும்.

இவ்வழக்கத்திற்கு ஆதாரமுண்டா? என்று தமிழ்மறைகளை ஆராயப்புக்கேன். ஆராய்ந்தபோது,

"ஆடினாய் நறு நெய் யொடு பால் தயிர்
அந்தணர் பிரியாத சிற்றம்பலத்தே"

"நல்வெண்ணெய் விழுது பெய்து
ஆடுதிர் நாடொறும்"

"வெண்ணெய் ஆடிய பெருமானடி"

என்ற வாக்கியங்கள் அச்சுப் புத்தகங்களில் அகப்பட்டன. பால், தயிர், நெய், வெண்ணெய் இந்த நான்கு பொருள்களுக்குத் தமிழ்மறை ஆதாரங்கள் கிடைத்தன. மோருக்கு மாத்திரம் அச்சுப் புத்தகங்களில் அகப்படவில்லை.

வெண்ணெயை எப்போது சமயாசாரிகள் சொன்னார்களோ அப்போதே அவர்கள் கோசலம் கோமயத்தைக் கூறியிருக்க மாட்டார்கள் என்ற தீர்மானம் எனக்கு உண்டாயிற்று.

ஆகையால், தமிழ் மறைகளின் ஏட்டுச் சுவடிகளை ஆராயப்புக்கேன்.

அவைகளில்:—

"பாலு நற்றயிர் நெய் வெணெய் மோர் பல வாட்டி"
(அப்பர்—கடவூர் வீரட்டம்—9)

"பாலொடு நெய் தயிர் மோர் பயின்றாடும் பரமேட்டி"
(சம்ப—ஆரூர்—2)

"பாலுள் நெய் முதலாமிக்க பசுவிலைந்தாடு வோனே"
(அப்பர்—அண்ணமலை—9)

என்ற வாக்கியங்கள் காணப்பட்டன. இவைகள் வறுமையாளன் ஒருவனுக்குப் புதையல் கிடைத்ததுபோல ஆயிற்று. இவ்வாக்கியங்கள் ஆனைந்து இன்னதென்பதை தெள்ளத் தெளிய ஐயமற விளக்கிக் காட்டின.

பாலுள் நெய் முதலாமிக்க என்றதால் பாலிலிருந்து உண்டாகும் தயிர், மோர், வெண்ணெய், நெய் முதலிய பொருள்களோடு பாலும் சேர்ந்து பசுவில் ஐந்து ஆடுவோனே என்று அப்பர் பெருமான் கூறியதாகக் கொள்ளக் கிடைக்கின்றது.

ஆகையால் ஆனைந்து இன்னதென்றே அறியாது ஆரியர்களுடைய ஸ்மிருதி மயக்கில்கிடக்கும் தமிழர்களுக்கு அறிவு கொளுத்துவான் இந்நூல் எழுதத் தொடங்கினும்.

சைவர்களாகிய தமிழருக்குச் சமயாசாரிகளும் சந்தானசாரியர்களுமே குருமார்கள் ஆவார்கள்.

தமிழ் நாட்டிலுள்ளோரை உய்வித்தற் பொருட்டே அவர்கள் எல்லோரும் அவதாரம்செய்து, சைவசமய ஒழுக்கங்களைக் கைக்கொண்டு, அவ்வொழுக்கங்களைப் பலரும் காணும்படி நடத்திக்காட்டிப் போனார்கள்.

அவர்களைப் பின்பற்றி நடப்பதே தமிழர்களாகிய நம்மவர் கடமை.

ஸ்மிருதி ஆசாரம் தமிழர்களுக்கு ஒவ்வாது; ஆரியபிராமணருக்குத்தான் ஸ்மிருதி முக்கியம்.

மகமதியன் குரானின் படியும், கிறிஸ்துவன் பைபிளின் படியும் தான் நடப்பான்.

மகமதியனை நாம் குருவாகக் கொண்டால் அவனுடைய குரான்படிக்குத்தான் கிரியைகளைச் செய்வான். அதுபோல, ஸ்மார்த்தர்களைக் குருவாக வைத்துக்கொண்டால் அவர்கள் ஸ்மிருதிப்படிக்குத் தான் செய்வார்கள்.

ஆகையால் தமிழர்களாயிருப்போர் தமிழ்மறை ஆகமங்கள் தெரிந்து தமிழர் முறைப்படி நடக்கும் ஒருவனைக் குருவாகக் கொள்ளவேண்டுமேயொழிய வேறின்று.

ஆகையால் சமயாசாரிகள் கூறியவண்ணம் ஆனைந்தைக் கூட்டி உபயோகிப்பதே தமிழர் கடமை.

தமிழ் மறைப்படி ஆனைந்தானது எல்லாருக்கும் பொதுவானது. பால், தயிர், நெய், மோர், வெண்ணெய் இவைகளை உபயோகிக்காத மகமதியனாவது, கிறிஸ்தவனாவது கிடையாது.

கோசலம் கோமயம் சேர்ந்த ஆனைந்தோ பலபேருக்குப் பகை. மகமதியனும் கிறிஸ்துவனும் தொடமாட்டான். தமிழ் நாட்டில் உள்ள வைணவர்களே அதனைச் "சாணிச்சாறு" என்று ஒதுக்கிவைத்து விட்டார்கள். ஆனால் ஒதுக்கிவைத்த அவர்களும் தமிழர் ஆனைந்தாகிய பால், தயிர், நெய், மோர், வெண்ணெயை உபயோகிக்கிறார்கள்.

ஆகையால், எல்லா மதத்தாருக்கும் பொதுவானதும், எல்லாராலும் அருவருக்கப்படாததும் ஆன தமிழர் ஆனைந்தே சிறந்தது. அதுதான் சிவபெருமானுக்கும் உகந்தது.

தமிழ்நாட்டில் உள்ளவர்களுடைய ஐயம் நீங்கும்படி அடுத்த இயல்களில் ஸ்மிருதியில் சொன்னவைகளையும், பத்ததிகளில் கூறியவைகளையும், தமிழ்மறைகளில் கூறியவைகளையும் கூறுகின்றோம். அப்போதாவது அவர்கள் ஐயம் தெளிவார்களென்று நம்புகிறோம்.

ஆனைந்து=(ஆன் + ஐந்து)

எனப் பிரித்து, ஆன் என்பதை ஆகுபெயராகக்கொண்டு பால் எனப் பொருள்செய்து, ஐந்து ஆக்களின் பால், அதாவது, நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை, என்ற பசுக்களிலிருந்து கறந்தெடுத்த பால் என்று கொள்வாருமுண்டு.

இந்த மாதிரி பொருள் கொள்ளுவது, "பாலாம் ஐந்துடனுடும் பரமனார்" என்னும் சம்பந்தர் தேவாரத்துக்கு ஒத்து இருக்கிறது.

ஆக்களின் ஐந்து பிரிவுகள் அவைகளின் நிறபேதத்தால் உண்டானவை,

நந்தை—கபிலநிறமும்
பத்திரை—கருப்பு நிறமும்
சுரபி—வெண்ணிறமும்
சுசீலை—புகை நிறமும்
சுமனை—சிவப்பு நிறமும் உடையன.

இதனைச் சண்டேசுர நாயனார் புராணத்திலும் அறியலாம்.

## 2. ஆரியர் ஸ்மிருதிப்படி-ஆனைந்து

கலியுகத்துக்கென எழுதப்பட்ட 18 ஸ்மிருதிகளில் ஒன்றாகிய பராசர ஸ்மிருதியில் பிராயச்சித்த காண்டம் 8-ம் அத்தியாயத்தில் பஞ்சகௌவியத்தைப் பற்றிக் கூறும் தமிழ் மொழிபெயர்ப்பை ஈண்டு வரைகின்றோம் :—

(சுலோகம் 28)

கோமூத்ரம், கோமயம், பசுவின்பால், பசுவின்தயிர், பசுவின்நெய், தர்ப்பை ஜலம் ஆகிய இவைகள் கூடியது பாபத்தைப் போக்குவதும் பரிசுத்தமும் ஆன பஞ்சகௌவியம் என்று பெரியோர்களால் சொல்லப்பட்டது.

(சுலோகம் 29—30)

கருத்த பசுவின்மூத்திரமும், வெளுத்த பசுவின் சாணியும், சிவந்த பசுவின்பாலும், அதிக ரத்த நிறமுடைய பசுவின் தயிரும், கபிலைப் பசுவின் நெய்யும், கிரகிக்கத்தகும்.

இவ்விதமான பசுக்கள் கிடையாத பட்சத்தில் கபிலைப் பசுவினுடைய நெய், தயிர், முதலிய சகலமும் கிரகித்துக் கொள்ளத்தகும்.

பஞ்ச கௌவியப் பிரமாணம் 30—31

கோமூத்ரம், 1 பலமும், பெருவிரலின் மேற்பாதி பாகத்தளவு கோமயமும், ஏழுபலம் பாலும் மூன்றுபலம் தயிரும் ஒருபலம் நெய்யும், ஒருபலம் தர்ப்பை ஜலமும் சேர்க்கத் தக்கனவாம்.

(சுலோகம் 32—33)

கோமூத்ரத்தைக் காயத்திரியிஞலும், கோமயத்தை "கந்தத்துவாரம்" என்ற இருக்கிஞலும், பாலை "ஆப்பியாஸ்வ" என்னும் மந்திரத்தாலும், தயிரை "ததிக்குராவண' என்னும் மந்திரத்தாலும், நெய்யை "சுக்கிரமஸி" என்ற மந்திரத்தாலும், தர்ப்பை ஜலத்தை "தேவஸ்யத்வா" என்ற மந்திரத்தாலும் செபித்து பஞ்சகௌவியத்தை ஒன்ருகச்சேர்த்து ஓமத்திற்காக அக்கினியின் சமீபத்தில் அதை ஸ்தாபிக்கவேண்டும்.

(சுலோகம் 33—34)

அக்கினியின் சமீபத்தில் வைக்கப்பட்ட பஞ்ச கௌவியத்தை "ஆபோஹிஷ்டா" என்று தொடங்கியுள்ள மூன்று இருக்குகளிஞல் ஒன்ருகக் கலக்கி "மாநஸ்தோகே" என்னும் ஓர் இருக்கிஞல் அபிமந்திரிக்கவேண்டும்.

(சுலோகம் 34—35)

குறைந்தபட்சம் ஏழு தர்ப்பைகளை உடையவைகளும், அறுக்கப்படாத நுனியை உடையவைகளும் ஈரமுள்ளவைகளும், அல்லது நிழலில் உலர்த்தப்பட்டவைகளா யிருக்கையால் கிளியின் வர்ணம்போன்ற வர்ணத்தை அடைந்தவைகளுமாயுள்ள தர்ப்பைகளால் விதிப்படி ஓமம் செய்யவேண்டும்.

தர்ப்பங்களால் எடுத்து பலாச இலைகளால் தேவதைகளை உத்தேசித்து பஞ்சகௌவியத்தை ஓமம் செய்யவேண்டும் என்று பிரஜாபதி சொன்ஞர்.

(சுலோகம் 35—36)

"இராவதி" என்று தொடங்கியுள்ள மூன்று இருக்குகள் "இதம் விஷ்ணு" "மாநஸ் தோகே" "சமக்னி" என்னும் இருக்குகள் ஆகிய இவைகளாலும் ஓமம்செய்து மிகுந்ததை பிராமணன் பானம் செய்யக்கடவன்.

(சுலோகம் 36—37)

பிரணவத்தைச் சொல்லிக் கையிட்டுக் கலக்கி, பிரணவத்தைச் சொல்லி சமித்தினால் கடைந்து, பிரணவத்தைச் சொல்லி எடுத்து, பிரணவத்தைச் சொல்லிப் பானம் செய்ய வேண்டும்.

(சுலோகம் 37—38)

மனிதர்களுடைய சரீரத்தில் எலும்பு, தோல் இவைகளைப் பற்றியதாகிய எல்லாப் பாபங்களையும் கிளர்ந்து எரிகிற அக்கினியானது கட்டையைத் தகிப்பதுபோல பிரமகூர்ச்ச பஞ்ச கௌவியமானது கொளுத்தும்.

கோவத முதலிய தோஷமானது அதிர்ஷ்டரூபமாகிய ஆத்மாவைப்பற்றி இருந்து பிராயச்சித்தத்தினால் உண்டாகின்ற அதிர்ஷ்டத்தால் நசிக்கிறது.

அதுபோல, புசிக்கலாகாத அன்னத்தை புசிப்பதனால் உண்டாகும் தோஷமானது தோலாகவும் அஸ்தியாகவும் சரீரத்தில் அமைந்திருக்கையில், பஞ்சகௌவியமும் அப்படியே சரீரத்தில் அமைந்து, காஷ்டத்தைப்பற்றிய அக்கினியானது அதைத் தகிப்பதுபோல அந்தத் தோஷத்தைத் தகிக்குமென்றறிக.

பிர்ம கூர்ச்சத்திற்குக் கால நிர்ணயம்

சதுர்த்தசியில் உபவாசமிருந்து, பௌர்ணமியில் பிர்ம கூர்ச்சத்தைச்செய்து பானம் செய்யவேண்டுமென்று பிரஜாபதியும், அப்படியே ஜாபாலியும், நதிதீரத்திலாவது, பசுத்தொழுவத்திலாவது புண்ணியகரமான ஸ்தானங்களிலாவது பிர்ம கூர்ச்சத்தைச் செய்யவேண்டுமென்று சாதாதபரும் சொன்னார்கள்.

(தொடரும்)

# செய்திகளும் குறிப்புகளும்
# News and Notes

## தலைமைப் பேருரை*

காஞ்சிபுரமாகிய இத்திருத்தலம் மிகப் பழைமையுடையது; அயோத்தி, மாயா, மதுரா, காசி, காஞ்சி, துவாரகை, அவந்திகை என்னும் ஏழு திருத்தலங்களுள் ஒன்றாகத் திகழ்வது; உமாதேவியார் "கரந்தரும் பயனிதுவென வுணர்ந்து கம்ப மேவிய உம்பர் நாயகனைப்" பூசிக்கப் பெற்றது; அறுபான்மும்மை நாயன்மார்களுள் ஒருவராகிய திருக்குறிப்புத்தொண்ட நாயனார் திருத்தொண்டு செய்து வீடு பெற்றது; பாங்கினொடு பலதளிகளும் விளங்கப் பெறுவது; திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் முதலிய சமய குரவர் நால்வர்களாலும் போற்றப்பெற்றது; முடியுடைத் தமிழ்வேந்தர் தலைநகராகக்கொண்டு அரசு செலுத்தியது; ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியாரால் குமரகோட்டத்து முருகப்பெருமான் திருவருள்பெற்று ஸ்ரீ கந்தபுராணம் பாடப்பெற்றது. ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் இத்திருத்தலத்திலிருந்தே சிவஞானமாபாடியம் இயற்றியருளியதாகச் சொல்லப்பெறுகின்றது. இன்னும் அளப்பிலாப் பெருமைவாய்ந்த இத்திருத்தலத்தின்கண் சைவசித்தாந்த மகா சமாஜம் தனது முப்பத்தோராம் ஆண்டு நிறைவுவிழாவை நிகழ்த்தப் பெறுதல் கழிபேருவகை பயப்பதாகும்.

### க. சைவசமயத்தின் பெயர்கட்குரிய காரணம்

நமது சமயம் சைவம், வைதிக சைவம், சித்தாந்தம் என்னும் பெயர்களால் வழங்கப்பெறுகின்றது. "சைவம்" என்னும் சொல் சிவத்தொடு சம்பந்தமுடைமையானும், "வைதிக சைவம்" என்னும் சொல் வேதம் ஆகமம் என்னும் இரு முதனூல்களையும் பிரமாணமாகக் கொண்டொழுகுதலானும், "சித்தாந்தம்" என்னும் சொல் முடிந்த முடிபாகிய உண்மைகளை விளக்குதலானும் போந்த காரணப்பெயர்களாகும்.

---

[*இஃது 1, 2, 3-1-'37-ல் காஞ்சிபுரத்தில் கூடிய சைவசித்தாந்த மகாசமாஜத்தின் 31-ஆம் ஆண்டு நிறைவு விழாவில் அவைத்தலைவர் சித்தாந்த ஆசிரியர் உயர்திரு. ந. சிவகுருநாத பிள்ளையவர்கள் நிகழ்த்தியது.]

## உ சைவசமயத்தின் பழைமை

சைவசமயம் இன்ன காலத்துத் தோன்றியது என்று அறியவாராத பழைமையுடையது. பழந் தமிழ் நூல்களாகிய சங்க இலக்கியங்களில் சைவக் கொள்கைகளும், சிவபிரானது உயர்வும் ஆண்டாண்டுக் காணப்பெறுகின்றன. மணிமேகலையில் சமயக்கணக்கர் தந்திறங் கேட்ட காதையில்,

"இருசுட ரோடிய மானனும் பூதமென்
றெட்டு வகையு முயிருமாக் கையுமாய்க்
கட்டிநிற் போனுங் கலையுருவி னோனும்
படைத்து விளையாடும் பண்பி னோனும்
துடைத்துத் துயர்தீர் தோற்றத் தோனும்
தன்னில் வேறுதா னொன்றில் லோனும்
அன்னோ னிறைவ னாகுமென் றுரைத்தனன்"

எனச் சைவக் கடவுள் இயல்பு விளக்கப்பெற்றிருத்தல் காண்க. இன்னோரன்ன பல சைவ உண்மைகளைச் சங்க இலக்கியங்களிற் பரக்கக் காணலாம்.

இனிச் சைவ சித்தாந்தத்திற் கொள்ளப்படும் தத்துவ உண்மைகளிற் பலவற்றைத் தமிழ் மொழி எழுத்துக்களின் அமைப்பிலும் இனிது காணலாம். அகரமாகிய தனி உயிர் கடவுளாகவும், ஏனைய கடவுள் அடிசார்ந்த நானெறி மூவகை உயிர்களாகவும், மெய் அறிவில் பொருளாகவும், சார்புயிர் இரண்டும் நல்லார் பொல்லார் என்னும் இருவகை உயிர்களாகவும், ஆய்தம் மெய்யின் நுட்பமாகிய நுண்ணுடலாகவும் கொள்வது பொருத்தமுடையதாகின்றது. ஆசிரியர் நச்சினார்க்கினியர் தொல்காப்பிய நூன்மரபு "ஔகார விறுவாய்ப் பன்னீரெழுத்தும் உயிரென மொழிப" என்னும் சூத்திரவுரையுள் "அகர உயிரைப்பற்றிக் கூறுங்கால், மெய்பதினெட்டினையும் இயக்கித் தான் அருவாய் வடிவின்றி நிற்றலின் உயிராயிற்று. இவை மெய்க்கு உயிராய் நின்று மெய்களை இயக்குமேல் உயிரென வேறோர் எழுத்தின்றாம் பிறவெனின், மெய்யினிற்கும் உயிரும் தனியே நிற்கும் உயிரும் வேறெ்ன உணர்க" என்பன முதலாகச் சைவசித்தாந்தத்திற் கூறப்படும் உயிர், மெய் (உடம்பு) என்பன வாதிய பொருள்களில் வைத்து உரைத்தல் காண்க. இதனால் அநாதி இயற்கையாகிய தமிழ் மொழியும் சித்தாந்தமும் ஒன்றோடொன்று தொடர்புற்று விளங்குதலால் தமிழ் முந்தியதோ சித்தாந்தம் முந்தியதோ என்று ஐயுறுதற் கிடனாகின்றது.

## ௩. பொருளாராய்ச்சியும் இலக்கணமும்

சித்தாந்தம் பொருளுண்மைகளை உரைப்பிரமாணம் ஒன்றேகொண்டு நிச்சயிக்கவில்லை. காட்சியோடு கருதல் அளவையுங் கொண்டே நிச்சயித்திருக்கிறது. உலகில் காணப்படும் பொருள்களிற் சில அசைவித்தால் அசையும் சடப் பொருள் (அறிவில் பொருள்)களாகவும், சில அறிவித்தால் அறியும் சித்துப்பொருள் (அறிவுப் பொருள்)களாகவும் இருத்தலானும், இவ்விரு பொருள்களையும் ஒன்றாக இணைத்துக் காரியப்படுத்துவான் ஒருவினைமுதல் பேரறிவும் பேராற்றலு முடையோனாய் இருத்தல்வேண்டுமாதலானும், ஆகவே அறிவுடைப் பொருள் ஒன்று, அறிவித்தால் அறியும் அறிவுடைப் பொருளொன்று, அறிவித்தாலும் அறியமாட்டாத அறிவில் பொருளொன்று ஆக மூன்று பொருள்களின் உண்மை தெள்ளிதிற் புலனாகின்றது. இவற்றையே பதி பசு பாசம் எனச் சித்தாந்த சாத்திரங்கள் கூறுகின்றன. இன்னும் சடப்பொருள்களை நுணுகி ஆராயும்வழி காணப்படும் உடம்பு, கருவி, உலகம், போகம் எனக் கூறப்படும் தனுகரண புவன போகங்கள் உயிரின் அறிவு விளக்கத்திற்கு ஏதுவாகக் காணப்படுதலானும், உயிரின் அறிவோடு ஒற்றித்து நின்று அறியாமையைச் செய்யும் பொருள் தனுகரண போகங்கள் என்று கூறுதல் பொருந்தாமையானும், அறியாமையை விளைக்கும் பொருள் வேறொன்று வேண்டப்படுவதாகின்றது. இனி உயிர் வருக்கங்கள் இன்பம் துன்பம் என்னும் இரண்டனையும் கலந்து அநுபவித்தலால் அவைகட்குக் காரணமும் வேண்டப்படும். தனுகரண புவனபோகங்கள் காரியமாயிருத்தலின் அவற்றிற்குக் காரணம் மாயை என்று கொள்ளப்படும். தனுகரண புவன போகங்கள் சுத்தமும் அசுத்தமுமாக இருவகைப்படக் காணப்படுதலின் அவற்றிற்குக் காரணமாகிய மாயையும் சுத்த மாயை அசுத்த மாயை என இருவகையாகக் கொள்ளப்படும். இவ்வாராய்ச்சியால் புலனாவது பதி என ஒரு பொருளும், பசுவென ஒரு பொருளும், பாசத்தின் வகையாக ஆணவம், கன்மம், சுத்த மாயை, அசுத்த மாயை என நான்கு பொருள்களும் ஆக மொத்தம் ஆறு பொருள்களேயாம். இதனை "ஏகன் அநேகன் இருள் கருமம் மாயை யிரண்டு - ஆக விவை யாறு தியில்" என்று திருவருட் பயன் என்னும் சித்தாந்த நூல் விளக்குகின்றது. ஏகன் என்னும் பதிப்பொருள் ஒன்றே. அநேகன் என்னும் பசுக்கள் எண்ணிறந்தன. இங்ஙனம் ஆராய்ச்சி முறையில் பொருள் உண்மைகளைச் சித்தாந்தம் உணர்த்தும் முறைமையினை ஒருதாரணத்தால் கண்டு கொள்ளலாம்.

சிவஞானசித்தியார், உயிரையும், உடல் முதலியவற்றையும் கூட்டுவிக்கும் பொருள் அவை இரண்டற்கும் வேருக வேண்டப்படும் என்பதனை,

"புத்திமற் காரி யத்தால் பூதாதி புருடன் ருனும்
அத்தனு கரணம் பெற்ருல் அறிதலால் அவற்றை மாயை
உய்த்திடு மதனுல் மாயைக் குணர்வொன்று மல்லை யென்றே
வைத்திடு மதனு லெல்லாம் வருவிப்பான் ஒருவன் வேண்டும்"

—சித்தியார்

என்று பரிசேட அளவைகொண்டு எவ்வளவு அழகாகக் கூறியிருக்கின்ற தென்பதை நோக்குங்கள்.

இனிச் சித்தாந்தம் இங்ஙனம் பொருளுண்மைகளை ஆராய்ச்சி செய்த பின்னர், பொருள்களின் இலக்கணங்களையும் தெள்ளிதின் உணர்த்தும். இறைவன் தன்னுண்மையில்,

"சிவனரு வுருவு மல்லன் சித்தினே டசித்து மல்லன்
பவமுதற் ருெழில்க ளொன்றும் பண்ணிடு வானு மல்லன்
தவமுற் லியோக போகந் தரிப்பவ னல்லன் ருனே
இவைபெற லியைந்து மொன்று மியைந்திடா வியல்பி னனே"

—சித்தியார்

என்று சொல்லப்படினும், ஆன்மாக்களை உய்வித்தற்பொருட்டுப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களையும் அவன் செய்து போதருகின்ருன். ஆகவே, இறைவனுக்கு யாதொரு தொழிலும் செய்யாது அறிவே சொரூபமாயிருக்கும் நிலை சொரூப இலக்கணமும், ஆன்மாக்கள் பொருட்டு ஐந்தொழில் செய்யும் நிலை தடத்த இலக்கணமும் ஆகின்றன. இங்ஙனம் பசு, பாசங்களுக்கும் இலக்கணம் வரையறை செய்யப்பெற்றிருக்கிறது. இவ்விரு வகை இலக்கண முணராக்கால் "இருநிலனய்த் தீயாகி நீரு மாகி இயமான ஞயெறியுங் காற்று மாகி" என ஓரிடத்திலும் "விரிகதிர் ஞாயிறல்லர் மதியல்லர் வேதவிதியல்லர் விண்ணு நிலனுந் திரிதரு வாயுவல்லர் செறிதீயுமல்லர் திகழ்நீரு மல்லர் தெளியின்" என மற்ருேரிடத்திலும் ஒன்றுக்கொன்று மாறு தலான வாக்கியங்கள் காணப்பட்டபொழுது ஒன்றனைக் கொண்டு மற்ருென்றனை இகழவேண்டிவரும். இவ்வித இலக்கண ஆராய்ச்சி மற்றெச் சமயத்தினும் காணப்படவில்லை. சில சமயங்கள் விவகாரத்திற்காகச் சில இலக்கணங்களைக் கூறிப் பின்னர் பாரமாத்திகத்தில் அவைகள் இல்லையென்று கூற நிற்கும்.

## ௪. சித்தாந்த நூல்களும் பாடியமும்

சித்தாந்த உண்மைகளை விளங்கும் நூல் வடமொழியில் சிவாகமங்களும், தென்றமிழ் மொழியில்,

"உந்தி களிறு உயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மைப் பிரகாசம்—வந்தவருட்
பண்புவினு போற்றிகொடி பாசமில்லா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்ப முற்று"

என்றபடி திருவுந்தியார் முதலிய பதினான்கு நூல்களாகும். இவற்றுள் சிவஞானபோதம், சிவஞானசித்தியார் என்னும் இருநூல்களும் தலைசிறந்தவையாகும். இவற்றின் சார்பாகப் பிற்காலத்து ஆன்றோர்களாற் பல நூல்கள் இயற்றப் பெற்றிருக்கின்றன. வடமொழியில் வியாசரால் இயற்றப்பெற்ற வேதாந்த சூத்திரத்திற்கு ஏகான்மவாதபரமாக ஸ்ரீ சங்கராசாரியராலும், விசிட்டாத்வைதபரமாக ஸ்ரீ இராமாநுஜாசாரியராலும், சிவாத்வைதபரமாக ஸ்ரீநீலகண்ட சிவாசாரியராலும் பாடியங்கள் இயற்றப் பெற்றிருப்பதுபோல வடமொழிச் சிவஞான போதத்திற்கு ஸ்ரீசிவாக்கிரயோகிகளாலும், தென்மொழிச் சிவஞானபோதத்திற்கு ஸ்ரீமாதவச்சிவஞானயோகிகளாலும் பாடியங்கள் இயற்றப்பெற்றிருக்கின்றன. வடமொழியில் இயற்றப்பெற்றுள்ள பாடியங்கள் வடமொழிப் பிரமாணங்களையே பிரமாணமாகக் கொண்டியற்றப் பெற்றுள்ளன. ஸ்ரீ மாதவ சிவஞானயோகிகளால் இயற்றப்பெற்ற திராவிட மாபாடியமொன்றே வடமொழிவேதாகம உபநிடதங்களையும் தென்றமிழ் மொழியிலுள்ள பன்னிருதிருமுறைகள், திருக்குறள் முதலிய நூல்களையும் தழுவித் திட்பமும் நுட்பமும் செறிய இயற்றப் பெற்றிருக்கிறது. திராவிடமாபாடியத்தால் விளக்கப்படாத பொருள் யாதுமில்லை. தேவார முதலிய பன்னிரு திருமுறைகளும் சைவசமயத்திற் பிரமாணமாகக் கொள்ளப்படுவன.

## ௫. சைவத் தனிப்பெருங் கடவுள்

சைவத்திற் கொள்ளப்படுங் கடவுள் சிவபெருமானே. சிவம் என்னும் சொல், வடமொழியில் மங்களம், ஒளி, எல்லாவற்றிலும் இருத்தல் என்பன வாதிய பொருளையும், தமிழ்மொழியில் செம்மை, சிவப்பு என்னும் பொருளையுந்தரும். சிவபெருமான் தீயும் சூடும் போலச் சிவமும் சத்தியுமாக விளங்குவர். சிவபெருமானுடைய சத்தி இச்சா சத்தி, கிரியா சத்தி ஞானசத்தியென மூவிதமாய்த் திகழும். சிவ

பெருமான் தனது சத்தியைக் கொண்டே படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழிலையும் செய்தருளுவர். சிவபெருமானே பரமபதி என்பது வேதம் உபநிடதம் புராணம் இதிகாச முதலிய எல்லாக்கலைகளாலும் உணர்த்தப் பெறுகின்றது இவ்வுண்மையைச் சதுர்வேத தாற்பரிய சங்கிரகம் இராமாயண தாற்பரிய சங்கிரகம், பாரத தாற்பரியசங்கிரகம் என்னும் நூல்களால் அறியலாம். சிவபிரானைப் பிரமன், விண்டு, உருத்திரன் என்னும் மூவருள் ஒருவரான உருத்திரனென்று சிலர் மயங்குவர். "மூவரு முப்பத்து மூவருமற்றொழிந்த தேவருங் காணாச் சிவபெருமான்", "மூவரு மறிகிலர் யாவர்மற் றறிவார்" என்பன முதலாகக் கூறப்படும் பிரமாண வாக்கியங்கள் அம் மயக்கத்தைத் தீர்க்கும் மருந்தாகும். அப்பையதீக்ஷிதர் அருளிச் செய்த சிவதத்துவவிவேகம் என்னும் நூலில் சிவபெருமானது பரத்துவ நிலை வேதோபநிடத முதலிய பிரமாணங்கள் கொண்டு நன்கு விளக்கப்பெற்றிருக்கின்றது. சிவபெருமான் உலகிற்கு அதீதனாகவும், காரணனாகவும், உயிராகவும், உலகமாகவும் நிற்கும் இயல்பினை,

"உலகினை யிறந்து நின்ற தரனுரு வென்ப தோரார்
உலகவ னுருவிற் றோன்றி யொடுங்கிடு மென்று மோரார்
உலகினுக் குயிரு மாகி உலகமாய் நின்ற தோரார்
உலகினு ளொருவ னென்ப உருவினை யுணரா ரெல்லாம்"

எனச் சிவஞான சித்தியார் எவ்வளவு அழகாக எடுத்துரைக்கின்றது பாருங்கள். சிவபெருமான் பெருமை அளவிடற் கரியது.

"கற்புறு சிந்தை மாதர் கணவரை யன்றி வேறோர்
இற்புறத் தவரை நாடார் யாங்களு மின்ப வாழ்வும்
தற்பொறி யாக நல்குந் தலைவனின் னலதோர் தெய்வம்
பொற்புறக் கருதோங் கண்டாய் பூரண னந்த வாழ்வே"

எனத் தாயுமான சுவாமிகள் கூறியருளிய திருவாக்கைச் சைவ மக்கள் கடைப்பிடித் தொழுக வேண்டியது இன்றியமையாததாகும்

## சு. சைவ அடையாளங்களும் மந்திரமும்

சைவ சமயிகள் அணிய வேண்டிய அடையாளங்களிற் சிறந்தவை இரண்டு. அவை திருநீறும், உருத்திராக்கமுமாம். இவ்வடையாளங்கள் உரிய தத்துவ உண்மைகளை விளக்குவன. திருநீறு சிவபெருமான் சங்கார காரணனாய் விளங்கும் உண்மையினையும், உருத்திராக்கம் அவனது பேரருளையும் விளக்கு

வனவாகும். இன்னும் பலவுள. சைவத்தில் உயர்ந்ததாகக் கூறப்படும் மந்திரம் பஞ்சாக்ஷரம் அல்லது திருவைந்தெழுத்தென்று சொல்லப்படும். திருவைந்தெழுத்து முறையே சிவம், சத்தி, ஆன்மா, திரோதம், மலம் என்னும் ஐவகைப்பொருளைக் குறிப்பதாகும். இதன் பெருமையைத் தேவார முதலிய திருமுறைகளிலும் சித்தாந்த சாத்திரங்களிலும் பரக்கக் காணலாம்.

### எ. சிவதீக்கை

தீக்ஷை என்னும் வடசொல் மலத்தைக்கெடுத்து, சிவத்துவத்தை விளக்குதல் என்னும் பொருளைத்தரும். சைவத்திற் கூறப்பட்ட தீக்கைமுறை, வேறு எச்சமயத்தினும் கூறப்படவில்லை. கிரியா சத்தியால் ஞானத்தை உதிக்கச் செய்வதற்குத் தக்க உபாயங்கள் தீக்கையில் விதிக்கப்பெற்றிருக்கின்றன. தீக்கை சமயம், விசேடம், நிருவாணம் என மூவகைப்படும். சைவசமயிகள் அனைவரும் சமய தீக்கையையாவது பெற்றுக் கொள்ள வேண்டும். பாலர்களும் விருத்தரும், பிணியாளரும், மாதரும், பல போகத்தவரும் பெற்றுக் கொள்ளுதற்குரிய எளிய தீக்கை முறைகளும் சைவ சமயத்தில் விதிக்கப் பெற்றிருக்கின்றன. ஏனைச்சமயிகள் எல்லாம் தத்தம் சமயத்தில் விதிக்கப் பெற்றுள்ள சமயப் பிரவேசக் கிரியைகளைக் கைக்கொண்டுவரவும், நம் சமயிகள்மட்டும் வேறு எச்சமயத்திலும் காணப்பெறாத அருமையுடைய தீக்கையைக் கைக்கொள்ளாதிருப்பது வருந்தத்தக்கதாகும்.

—தொடரும்

---

# தமிழ்த் திருநாட் கொண்டாட்டம்

## தலைமையுரையும் பிறவும்

சென்னைப் புரசைக் கம்பர் கழகத்தின் சார்பில் அன்னதான சமாசக் கட்டடத்தில், 16-1-'37 சனிக்கிழமை மாலை 6 மணிக்கு, அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ் வரிவுரையாளர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள் தலைமையில், தமிழ்த்திருநாள் மிகவுஞ் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது.

கடவுள் வாழ்த்துப்பாடிய பின், தமிழாசிரியர் சி. ஆர்., கோவிந்தராஜ முதலியாரவர்கள், தலைவரவர்கட்கு வரவேற்புரைத்தாள் படித்து அளித்தார்கள். பின் தலைவரவர்கள் எழுந்து, சேர சோழ பாண்டிய அரசர்கள் காலத்தில் தமிழ் மொழி மிகவுஞ் சீரிய நிலையில் இருந்ததென்றும், அகத்திய முனிவர் தென்னாடுவந்து என்றுமுள தென்றமிழைப் பயின்று

தமக்குப் புகழ் தேடிக்கொண்டார் என்பது கம்பர் பாடிய "என்றுமுள தென்றமிழ்" என்ற அடியை முதலாகவுடைய பாட்டில் 'இசைகொண்டார்' என்ற தொடரால் பெறப்படுகிறதென்றும், இறைவனுக்கு எப்பணிகளையும் விடப் பாமாலை பாடி வணங்குதலே சிறந்த பணியாகுமென்பது 'அருச்சனை பாட்டேயாகும்' என்று சேக்கிழார் பெரியபுராணத் திருப்பாட்டினால் விளங்குகிறதென்றும், தமிழ்மொழி இயல்பினுள், புகுந்து ஆராயின் அம்மொழியின் சிறப்பு இனைத்தெனச் சொல்லமுடியாத அளவிற்றதென்றும், கருதிய பொருள்களைத் தெளிவுற விளக்குவதில் தமிழ்மொழி ஒப்பற்றதென்றும், தமிழ்நூல்களை அகம், புறம் என்று பிரித்து வகுக்கப்பட்டிருக்கிற முறை தமிழுக்கே உரியதென்றும், அகம் காமச்சுவையினையும் புறம் வீரச்சுவையினையும் விளக்குவனவென்றும் திருக்குறள் காமத்துப் பாலிலுள்ள 25 அதிகாரங்களின் அருமைப்பாட்டினை என்னென்று சொல்வதென்றுங் கூறி,

"செல்லாமை யுண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை"

"எழுதுங்கால் கோல்காணுக் கண்ணேபோல் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து"

என்னும் இரண்டு குறள்களை எடுத்து அவற்றின் புதை பொருள்களை இனிது விளக்கிக் காட்டியது பாராட்டுதற்குரியது.

தமிழ்க் காவியங்களை யாவரும் நன்கு கற்று அச்சிறப்புக்களை நன்கு பயிலுதல் வேண்டும். அக்காலப் புலவர்கள் இக்காலத்தினர்போல, பல நூல்களிலிருந்து சொற்களையும், சொற்றொடர்களையும் பொறுக்கியெடுத்துக் கவி முடைவதில்லை. அக்காலப் புலவர்கட்குச் சொல்லும் பொருளும் மதுஒழுக்குப்போலத் தாமே தட்டுத்தடையின்றி நினைத்த பொழுதே வரும்.

இக்காலத்தவர்போல வித்துவான், தமிழ்ப் புலவர் போன்ற பட்டங்களைக் கொடுப்பாரின்றித் தாமே சூடிக்கொள்ள நாணுவர் பண்டைப் புலவர்கள் என்பதை,

"அறமுரைத் தானும் புலவன் முப்பாலின்
திறமுரைத் தானும் புலவன்-குறுமுனி
தானும் புலவன் றரணி பொறுக்குமோ
யானும் புலவ னெனில்"

என்ற பொய்யா மொழிப் புலவர் பாடிய செய்யுளைக்கொண்டு விளக்கினார்கள்.

பின்பு தமிழ்க் காதலர் சிறப்பினை, "ஒரு போர் வீரன் போர்க்களத்தில் எதிரியினது அம்பினால் தாக்குண்டு கீழே விழக்கூடிய சமயத்தில் அவனுடைய இன்னுயிர்த் துணைவி ஓடி வந்து, தன் கணவன் நிலமகள்மேல் விழுதலாகாது என்று அவர் உடலைத் தன்மேற் றாங்கியும், தனக்கு முன் அவர் உயிர் விடுவராயின் விண்ணாட்டில் அரம்பையர் அவரை வரவேற்கவும் விட லாகாது என்று அவர் உயிர்துறக்குமுன் தானே உயிர் நீத்து விண்ணடுசென்று அவரை வரவேற்றல் வேண்டுமென்று கருதி உயிர் விட்டனள்" என்ற கருத்தடங்கிய பழந்தமிழ்ப் பாடலின்வழி விளக்கியது எல்லோரையும் மகிழ்வித்தது.

ஒரு தலைவன் தன் காதலியிடம் 'என்னுடைய ஓவியப் புலவன் நல்லதொரு சித்திரம் வரைந்திருக்கின்றான்; அதனைப் பார்க்கவா' என்று சொல்லி அவளை அழைத்தான். அதற்கு அவள், 'அச்சித்திரம் ஆண் மகனுருவமெனின் யான் பார்க்க விரும்பேன். அது பெண் மகள் உருவமெனின், அதனை நீர் பார்க்கவும் நான் பொறேன்' என்று கூறிய தமிழ்க்காதலர் மாண்பினை விளக்க வேதநாயகம் பிள்ளை அவர்கள் பாடிய பாட்டினை* எடுத்துக் கூறியது யாவரையும் இன்புறச் செய்தது.

பின்னர், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர் திரு. ஆர். பி. சேதுப்பிள்ளை பி. ஏ., பி. எல்., அவர்கள் பின்வருமாறு பேசினார்கள்.

தமிழ்நாட்டில் இப்போது சட்டசபைத் தேர்தல் நடைபெறப்போகின்றது. அதற்கு நண்பர் பலர் உங்களுடைய ஓட்டுக்களைக் கேட்க வருவார்கள். அப்போது நீங்கள் அவர்களைப் பார்த்து, "ஐயா நீங்கள் தாய்மொழியாகிய தமிழ் மொழியை ஆதரிக்க வேண்டும். சட்டசபையிலும் பிற இடங்களிலும் தமிழ் மொழியிலேயே காரியங்களை நடத்துதற்கு ஏற்பாடுசெய்தல் வேண்டும். தமிழ் நாட்டுக்கு இந்தி போன்ற மொழிகளைக் கட்டாயப் பாடமாக்குதல் கூடாது என்பதை ஒத்துக் கொள்ளுங்கள். இங்ஙனம் உறுதி சொல்லுவீர்களானால் எங்கள் ஓட்டுக்களைப் பெறலாம்; இல்லையேல் ஓடிப் போகலாம்" என்று சொல்லி அவர்களை ஓட்டிவிடுங்கள் என்று இவ்வாறாக உணர்ச்சி உண்டாகுமாறு பேசினார்கள்.

---

* செய்யுளை ௨௬௭-ஆம் பக்கம் பார்க்க.

அதன்பின் சென்னை நகராண்மைக் கழகக் கல்வித் தலைவர் திருவாளர் ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி. ஏ., எல். டி., அவர்கள் பின்வருமாறு பேசினார்கள்.

தென்னாட்டார் இந்தியைக் கற்றுக் கொள்ளுதல் வேண்டுமென்றும், அதனைக் கல்லூரிகளில் கட்டாயப் பாடமாக வைத்தல் வேண்டுமென்றும் கிளர்ச்சி நடைபெறுகின்றது. அதனை எழுதவும் பேசவும் வேண்டிய அளவுக்குக் கற்றுக் கொள்ளுதல் வேண்டுமென்று விரும்புவோர் படிக்கட்டும். தமிழிலேயே எழுதவும் பேசவும் நூற்றுக்குத் தொண்ணூறு பேர்கட்குத் தெரியாது. இத்தகைய நாட்டில் இந்தியைக் கட்டாயமாய்க் கற்றல் வேண்டுமென்று புகுத்துவது அடாத செயலாகும். தமிழ் நாட்டில் யாண்டும் வீடுதோறும் தமிழ் மணங் கமழுதல் வேண்டும். இந்தியை ஓரளவு எழுதவும் பேசவும் கற்பதில் குற்றமில்லை. எனினும் கட்டாய பாடமாக அமைக்க எழுகின்ற கிளர்ச்சியைத் தமிழ் மக்கள் எதிர்த்தே தீருதல் வேண்டும்.

அதன்பின்னர்த் திரு E. K. நடேச சர்மா அவர்கள் தமிழ் வாளர்ச்சியைப் பற்றிச் சிறிது பேசினார்கள்.

பின்பு தலைவரவர்கள் தனித் தமிழில் நூல்கள் எழுதுவதை எல்லாரும் பாராட்டுதல் வேண்டும் என்றும், வழக்கு வீழ்ந்த தமிழ்ச் சொற்களையெல்லாம் உரை நடையில் பயன்படுத்தி ஆட்சிக்குக் கொண்டுவருதல் வேண்டுமென்றும், அதுவே தமிழாசிரியன்மாரின் சிறந்த கடனாகுமென்றும், தேகப்பயிற்சிச்சாலை, தொழிற்சாலை, படக்கிருகம் முதலிய சொற்களுக்குப் பழந்தமிழ் நூல்களில் முரண்களரி, பணிக்களரி களாக இல்லம் போன்ற சொற்கள் காணக் கிடைக்கின்றன என்றும் தனித்தமிழ்க் கொள்கையினை மிகவும் பாராட்டிப் பேசினார்கள். அதன்பின், தலைவர் திரு. பண்டித மணியவர்கள், 'பந்திக்குமுந்து, படைக்குப் பிந்து' என்ற பழமொழி தமிழ்நாட்டில் இடைக்காலத்தில் தோன்றியதென்றும், பண்டைக்காலத்தில் அப்பழமொழி வழங்கியிருத்தற்குக் காரணமில்லை என்றும் "போரெனிற் புகலும் புனைகழன் மறவர்" என்றும், "புட்பகைக்—கேவானாகலிற் சாவேம் யாமென—நீங்கா மறவர் வீங்கு தோள் புடைப்ப" என்றும் கூறிய புறநானூற்றுச் செய்யுட்களே அதற்குச் சான்று பகரும் என்றும் இவை போல்வன அரிய கருத்துகளை விளக்கினர்.

# தமிழ்த்தெய்வ வணக்கம்

[கோடுமுடி வித்துவான் பெ. கோவிந்தன்]

(புதுக்கவி)

அன்னையும் அப்பனையும் அறத்தினையும்
பொருளினையும் அகத்தின் னையும்
தன்னையுந்தன் னடிவணங்கும் என்னையுமிங்
கறிவிக்குந் தமிழ்த்தெய் வத்தைச்
சென்னிபல முறைவணங்கும்; வாய்வாழ்த்தும்;
கைகள்தொழும்; சேரும் நெஞ்சம்;
பொன்னடிவாழ் தென்னாட்டை வலம்வருங்கால்;
மெய்விழுந்து புரண்டு போற்றும். 1

அடியிடையிற் சிலம்புமணி மேகலையும்
அணிந்துதன தங்கை மார்பு
முடிமிசைச்சூ ளாமணிசிந் தாணிமுப்
பால்கொள்தமிழ் மூவா மாதைப்
படிமிசைவாழ் சின்னாளும் பயன்பெறுநா
ளாமாறு பணிந்து வாழ்வாம்;
வடிவிலவள் இயல்காண்பாம்; இசைகாண்பாம்;
நாடகமும் மகிழக் காண்பாம். 2

வண்ணமழ கமைந்துயர்ந்த கலையாலும்
அணியாலும் வனப்பு வாய்ந்திங்
கெண்ணுமெழுத் துங்கொண்டு முப்பொருளுங்
கற்பிக்கும் இறைவி தன்னைப்
பண்ணமருஞ் செந்தமிழே! பழத்தினுந்தீஞ்
சுவைத்தமிழே! பயிலுந் தோறும்
நுண்ணறிவு தருந்தமிழே! பல்லூழி
வாழ்கஎன நுவன்று வாழ்வாம். 3

ஈரடியால் நடந்துபழ மொழிபேசி
ஐந்திணையி லிருந்து கோவை
சீருடைநான் மணிக்கடிகை காஞ்சியணிந்
துலாக்கொள் தமிழ்த் தெய்வ மாதைப்
பாரிடைநோக் கிப்பத்துப் பாட்டிசைத்தார்;
காப்பியங்கள் பகர்ந்தார் பல்லோர்;
நேரடைந்து பலரெட்டுத் தொகையீந்தார்;
நாம்தொழுவம் நினைந்து நெஞ்சே! 4

உயர்விலுமெய் யறிவிலுநல் லொலியிலுஞ்செல்
வடிவிலுமே லோங்கி முன்பே
இயலிலுநல் லிசையிலுநா டகத்திலும்பேர்
கொண்டதமிழ் இறைவி தன்னை
மயலறநெஞ் சே!நினைந்து வணங்குக;வா
யே!வாழ்த்தி வணங்க மெய்யே
செயலறமண் மிசைவீழ்ந்து வணக்குக;நாம்
பேரன்பு செய்து வாழ்வாம். 5

சிந்தைக்குந் தித்தித்து நாவினுக்குந்
தித்தித்துச் செவிக்குந் தித்தித்
தெந்தமயக் கறுத்தெம்மை வாழ்விக்குந்
தமிழணங்கை எமது தாயைக்
கொந்தெடுக்குஞ் செங்கழுநீர் மந்தாரை
மல்லிகைவெண் கொல்லை முல்லைச்
செந்தொடைக்கீ ரடிக்காக்கிச் சீருரைத்தின்
னசையினெடுஞ் சென்னி சேர்ப்பாம். 6

மன்னரடி தொழுமாந்தர் படைசூழப்
பலபுலவர் மகிழ்ந்து பாட
மின்னிடையார் தொடைசூடச் சங்கமிருந்
திசைகொண்டு விளங்கும் மாவை

முன்னணுகிக் காணாத கண்ணென்ன
 கண்? தமிழாம் மூவா மாதைப்
பண்ணியிசை பாடாத நாவென்ன
 நா? நா! கண்! பாடு; காணே. 7

கடலழுந்தித் தென்குமரி கழியுமுனும்
 கரியபெருங் கடற்கு மேலே
வடயிமயம் எழுமுன்னும் கலைகளோடும்
 வாழ்ந்ததமிழ் மாது தன்னை
உடனுறுமெய் யறிவெமக்கும் பெற்றோர்க்கும்
 முன்னோர்க்கும் உதவிப் பின்னும்
தொடருறுமெங் குலத்தோர்க்கும் உதவும்பே
 ருதவியுனித் தொழுதல் செய்வாம். 8

பண்டைமொழி பலசாவ அவற்றினுக்கும்
 முன்தோன்றிப் பலசே யீன்று
மண்டலமெங் குங்கன்னிச் செந்தமிழென்
 றுரைசெய்ய வாழும் மாதைத்
தண்டமிழோர் கண்டஇறை சாவாது
 வாழ்வதுபோல் தமிழே வாழ்க
கொண்டுறையும் வளநாடு வாழ்க என
 வாழ்த்தியன்பு கூர்ந்து வாழ்வாம். 9

சில்லெழுத்தால் சொல்லாக்கிச் சிலசொல்லால்
 பலபொருளைச் சிறிய யாப்பில்
பல்லணிசேர்த் தறிவித்த வள்ளுவனை
 ஈன்றதமிழ்ப் பழந்தெய் வத்தை
மெல்லொலிசேர் சொன்மலரால் பன்மாலை
 யாத்தன்பு மீதூர் நெஞ்ச
நல்லணையின் மீதிருத்தி வைகறையி
 லெழுந்திருந்து நயந்து வாழ்வாம். 10

# குறுந்தொகை மொழிபெயர்ப்பு

[MR. T. B. KRISHNASWAMY MUDALIAR, M.A., B. L.
(District Educational Officer, South Arcot.)

## 25 குறிஞ்சி

யாருமில்லைத் தானே கள்வன்
தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ
தினைத்தா ளன்ன சிறுபசுங்கால
ஒழுகுநீ ராரல் பார்க்குங்
குருகு முண்டுதா மணந்த ஞான்றே.

—கபிலர்.

25. Himself the thief; none heard his oath; what shall I do if he prove false? When we wedded, only the stork, with legs slender as the millet blade, waiting for ARAL fish at the ever flowing water, saw anything.

—Kapilar.

## 26 குறிஞ்சி

அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை
மேக்கெழு பெருஞ்சினை யிருந்த தோகை
பூக்கொய் மகளிரிற் றோன்று நாடன்
தகாஅன் போலத் தான்றீது மொழியினுந்
தன்கண் கண்டது பொய்க்குவ தன்றே
தேக்கொக் கருந்து முள்ளெயிற்றுத் துவர்வாய்
வரையாடு வன்பறழ்த் தந்தைக்
கடுவனு மறியுமக் கொடியோ னையே.

—வெள்ளி வீதியார்

26. Though the Lord of the land—where the Peacock on the up-rising huge branch of the fully blossomed VENGAI of the dark-trunk resembles a maiden plucking flowers,—spoke harsh words like an unworthy person, yet his behaviour betrayed nothing improper.

The sharp-toothed red-mouthed sweet-margo-eating monkey father of the young one disporting among the branches knows, for it saw the cruel person!

—**Velli Veedhiyar.**

27 பாலை

கன்று முண்ணாது கலத்தினும் படாது
நல்லான் றீம்பா னிலத்துக் காஅங்
கெனக்கு மாகா தென்னைக்கு முதவாது
பசலை யுணீஇய வேண்டுந்
திதலை யல்குலெம் மாமைக் கவினே.

—**கொல்லனழிசி**

27. It feeds not the calf, it falls not the pot, the sweet cow's milk that runs to waste on the ground; like wise my soft-glowing beauty-like tender mango leaf—profiteth me not, nor my husband, but feeds the disease of fruitless longing!

—**Kollanalisi.**

28 பாலை

முட்டு வேன்கொ றாக்கு வேன்கொல்
ஓரேன் யானுமோர் பெற்றி மேலிட்
டாஅ வொல்லெனக் கூவு வேன்கொல்
அலமர லசைவளி யலைப்பவென்
உயவுநோ யறியாது துஞ்சு மூர்க்கே.

—**ஔவையார்**

28. In this town, alas! that sleeps heedless of the passion that tosses like a tempest and consumes me quite what shall I do? Knock my head against the wall or a ttack the first comer, or howl for any assumed or affected cause!

—**Auvaiyar.**

# உலகப் போக்கு

## மரநூல் ஆடை

ஜெர்மனியில் துணி விஷயத்தில் பிறநாட்டாரை எதிர்பாரா திருக்குமாறு 100-க்கு 15 வீதம் மரநார் அடங்கிய துணிகளையே ஜனங்கள் அரையாடைக்கு உபயோகிக்கவேண்டுமென்று அதிகாரிகள் உத்தரவு செய்திருக்கிறார்கள். மரநார்—(நூல்) உற்பத்தி செய்வதற் காக ஜெர்மனியில் பத்து பெரிய தொழிற்சாலைகள் ஏற்படுத்தியிருக் கிறார்கள்.

## இலக்கணப்பிழைக்குத் தண்டனை

யுகோஸ்லாவியா நாட்டில் செரஜோவா நகரத்தில் இலக்கணப் பிழைக்கு இடம்கொடுத்து பாஷையைக் கெடுக்கலாகாதென்று அதி காரிகள் முடிவுசெய்திருக்கிறார்கள். கடைக்காரர்கள் இலக்கணப் பிழையுள்ள விளம்பரங்களோ விளம்பரப் பலகைகளோ போட்டிருந் தால் அவர்களுக்கு உடனேபோலீஸார் அபராதம் விதிக்கலாம். பகிரங்கமாகக் கெட்ட தூஷணமான வார்த்தைகளை உபயோகிக்கிற ஆண்பெண்களுக்கும் அபராதம். வீதிகளிலே செல்லுகிற மக்களைப் பற்றி முரட்டுத்தனமாகவோ வருந்தத்தக்க விதமாகவோ பேசுகிற கடைவியாபாரிகளுக்கும் அபராதம் விதிக்கலாம்.

## சொல்லுக்கு 6000 பொன்

அமெரிக்காவில் ஒரு புஸ்தக வியாபாரி தாம் வெளியிட்டிருக்கிற ஒருபுஸ்தகத்தில் உள்ள ஓர் அச்சுப் பிழையை முதலில் கண்டுபிடித் துச் சொல்லுகிறவர்களுக்கு 25,000 டாலர்—6,000 பொன் பரிசு கொடுப்பதாக விளம்பரம்செய்திருக்கிறார். அதன் பயனாக $7\frac{1}{2}$ ஷிலிங், சுமார் ஐந்து ரூபாய் விலையுள்ள அந்தப் புஸ்தகம் முதல் வாரத்திலே சுமார் இரண்டு லக்ஷம் பிரதிகள் விற்பனையாய் விட்டனவாம்.

## 103-ல் இளமை

எண்பது வருஷங்களுக்குமுன் இத்தாலி வாசியான ஒருவர் ராணுவ வேலைக்கு மனுச்செய்துகொண்டார். அவர் அதற்கு லாயக் கில்லையென்று வைத்தியர்கள் நிராகரித்துவிட்டார்கள். அவர் இப் பொழுது 103-வது பிறந்த தினத்தைக் கொண்டாடியிருக்கிறார். டாக்டர்களிடம் போகாததே தீர்க்காயுளுக்குக் காரணமென்று அவர் சொல்லுகிறார். அவர் வெகுகாலம் சிங்கத்தைப் பழக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தார். இந்த வயதிலும் அவர் பயிர்த்தொழில் செய்து வரு கிறார்.

## கோடி தர்மம்

இங்கிலாந்தில் கோடிக்கணக்கான பொன் தருமம் செய்து வரும் லார்டு நப்பீல்டு தமது மோட்டார்த் தொழிற்சாலைகளில் $21\frac{1}{2}$ லட்சம் பொன் மதிப்புள்ள பங்குகளின் உரிமையைத் தொழிலாளர் களுக்கு விட்டுக்கொடுத்து விட்டார். தொழிற்சாலைகளில் கவரும் லாபத்தைப் பகிர்ந்து கொள்ளுமாறு செய்திருக்கிறார்.

Reg. No. M. 1725 Jan.—Feb. 1937



---

Printed by Mr. C. M. Govindarajan, at the The Progressive Printers.
Coral Merchant Street, Madras. and Published by Mr. V. Subbiah
for The S. I. S. S. W. P. Society, Tinnevelly.